Regd. No. 2975.

ஸ்ரீ:

# SRI RAMANUJAN

*Editor*: P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.

# ஸ்ரீ ராமாநுஜன் 241

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 6 ஜீவியச் சந்தா ரூ. 116.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார்ஜீயர் திருவடிகளே சரணம்

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி *
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி* — ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி *
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1969 ஜனவரி௴ கீலக௵ தை௴

# ஸ்ரீ உ.வே. P. B. அண்ணங்கராசாரியார் சுவாமிகளின் நூல்களுக்கு ஜாபிதா.

திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகையென்னும் விரிவுரையானது நாலாயிரத்திற்கும் ஸ்ரீ ஸ்வாமிகள் இயற்றியது உலகம் பரவியுள்ளது. (பதவுரை, கருத்துரை, விசேஷவுரை.)

### முதலாயிரம்

| | ரூ. | ந-பை |
|---|---|---|
| திருப்பல்லாண்டும் பெரியாழ்வார் திருமொழியும் | 6 | 00 |
| திருப்பாவை ஆழ்பொருள் விளக்கு | 2 | 00 |
| சங்கத் தமிழ் மாலை முப்பதும் திருப்பாவை ஜீயரும் | 1 | 50 |
| திருப்பல்லாண்டு முதல் நாச்சியார் திருமொழிவரை எளியவுரை | 3 | 50 |
| நாச்சியார் திருமொழி தீபிகை | 2 | 00 |
| பெருமாள் திருமொழி ,, | 2 | 00 |
| திருச்சந்த விருத்தம் ,, | 3 | 00 |
| திருமாலை, திருப்பள்ளியெழுச்சி அமலனாதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு ,, | 4 | 00 |

### இரண்டாவதாயிரம்

| | ரூ. | ந-பை |
|---|---|---|
| பெரியதிருமொழியாயிரம் திருக்குறுந் தாண்டகம், திருநெடுந்தாண்டக முட்பட | 15 | 00 |

### மூன்றாவதாயிரம்

| | ரூ. | ந-பை |
|---|---|---|
| (இயற்பா) முதல் திருவந்தாதி முதலாக இராமாநுச நூற்றந்தாதி வரை திவ்யார்த்ததீபிகை | 15 | 00 |

### நான்காவதாயிரம்

| | ரூ. | ந-பை |
|---|---|---|
| திருவாய்மொழியாயிரம் தீபிகை | 25 | 00 |
| நித்யாநுஸந்தானவுரை (ஷை இரண்டு பாகமாகவுமுண்டு) | 5 | 00 |
| திவ்யப்ரபந்தக் கண்ணாடி | 1 | 00 |
| ஆழ்வார்களுகந்த இராமன், ஆழ்வார்களுகந்த கண்ணன் | 1 | 00 |

---

| | ரூ. | ந-பை |
|---|---|---|
| உபதேச ரத்தினமாலை, திருவாய் மொழி நூற்றந்தாதி ஆர்த்திப் பிரபந்தம் இவற்றின் உரை | 3 | 00 |
| ஞானஸாரம், பிரமேயஸாரம், ஸப்த காதை இவற்றின் உரை | 1 | 00 |

### ஸகலபூர்வாசார்ய ஸ்தோத்ரங்களுக்கு உரைகள்.

| | ரூ. | ந-பை |
|---|---|---|
| முகுந்த மாலை, ஸ்தோத்ரரத்னம் சதுச்சுலோகி | 2 | 50 |
| கத்யத்ரயம் | 2 | 00 |
| ஸ்ரீவைகுண்டஸ்தவம் | 2 | 50 |
| ஸுந்தரபாஹுஸ்தவம் | 2 | 50 |
| அதிமாநுஷஸ்தவம் | 2 | 00 |
| வரதராஜஸ்தவம், ஸ்ரீஸ்தவம் | 2 | 50 |
| ஸ்ரீரங்கராஜஸ்தவம் பூர்வசதகம் | 2 | 50 |
| ஷை உத்தரசதகம் | 2 | 50 |
| அஷ்டச்லோகி | 0 | 75 |
| ஸ்ரீகுணரத்நகோசம் | 1 | 75 |
| யதிராஜவிம்சதி, நக்ஷத்ர மாலிகை முதலான 16 ஸ்தோத்ரங்கள் | 3 | 50 |
| ஸுதர்சந சதக வியாக்கியானம் (மறு பதிப்பில்) | | |

### ஆழ்வாராசார்யப் பெருமை நூல்கள்.

| | ரூ. | ந-பை |
|---|---|---|
| ஆழ்வார்களின் வைபவம் | 1 | 00 |
| பூர்வாசார்ய ப்ரபாவம் | 2 | 00 |
| கூரத்தாழ்வான் வைபவம் | 1 | 00 |
| வேதாந்ததேசிக வைபவம் | 1 | 00 |
| மணவாளமாமுனிகள் வைபவம் | 1 | 00 |
| ஐப்பசித்திருமூல மலர் | 1 | 00 |
| நவரத்ன நவநீதி | 2 | 00 |

### ரஹஸ்யார்த்த விளக்க நூல்கள்

| | ரூ. | ந-பை |
|---|---|---|
| முமுக்ஷுப்படி ஸாரமென்கிற திருமந்த்ர — த்வய — சரமச் லோகார்த்த விவரணம் | 2 | 00 |
| தத்வத்ரயஸாரம் | 2 | 00 |
| ஸ்ரீவசநபூஷணஸாரம் | 2 | 00 |
| ஆசார்யஹ்ருதயஸாரம் (மறு பதிப்பில்) | | |

(ராப்பர் 3-வது பக்கம் காண்க.)

பன்னிரண்டாவது வயதில் **மஞ்ஜுபாஷிணீ** என்கிற ஸம்ஸ்க்ருத பத்ரிகையைத் தாம் நடத்த உபக்ரமித்தார். அது ஐந்தாறு வருஷகாலம் மாதப் பத்ரிகையாகவும், பிறகு ஐந்தாறு வருஷகாலம் பக்ஷப்பத்ரிகையாகவும் நடந்துவந்தது. அடியேனுடைய இருபத்திரண்டாவது வயதில் ஸ்ரீஸ்வாமி வடநாட்டு யாத்திரையை மிகப் பெரிய திக்விஜய



யாத்திரையாக ஸங்கல்பித்துப் புறப்பட்டருளும் போது அந்த (மஞ்ஜுபாஷிணீ) பத்ரிகையின் நிர்வாஹத்தை அடியேன்பால் ஒப்படைத்து எழுந்தருளினர். அப்போது அதனை வெள்ளிக்கிழமை தோறும் வெளிவரும் [ஸாப்தாஹிக] பத்ரிகையாக ஆக்கிப் பதினேழு வருஷகாலம் இடையறாமல் நடத்தி வந்தேன். அக்காலத்தில் அத்தோடுகூடவே சிலவாண்டுகள் **வனமாலிகை**யென்னும் பெயராலும், சிலவாண்டுகள் **ப்ரஹ்மவித்யா** என்னும் பெயராலும் தமிழ்ப் பத்திரிகையும் நடத்திவந்தேன்.

ஸ்ரீஸ்வாமி திருநாட்டுக்கெழுந்தருளின பிறகு சிலவாண்டுகள் பத்ரிகாப்ரகாசனத்தை நிறுத்தி புஸ்தக ப்ரகாசனங்களைமட்டும் நடத்தி வந்தேன். அப்போது பல ஆப்தர்களால் உத்ஸாஹமூட்டப்பெற்றவடியேன் ஸ்ரீஉவே. வடகரை ராமாநுஜாசாரியரை ஸஹகாரியாகக்கொண்டு ஸ்ரீராமாநுஜ ஸித்தாந்த வைஜயந்தீ பத்ரிகையையும், ஸ்ரீமதுபயவே. கோயில். மெ. ஸுந்தரராஜாசார்ய ஸ்வாமியை ஸஹகாரியாகக்கொண்டு அம்ருதலஹரீ பத்ரிகையையும் நடத்தத் தொடங்கினேன். அப்போது ஸ்ரீராமாநுஜனையும் ஸ்வதந்த்ரமாக நடத்தத் தொடங்கினேன். பேரருளாளனுடைய பரமக்ருபையினால் இதுமட்டுமே இடையூறின்றி நடைபெற்று வருகின்றது. இதனோடு கூடவே தொடங்கின ஸம்ஸ்க்ருத ஹிந்தீ பாஷா பத்ரிகையான வைதிக மனோஹராவும், ஆந்த்ர பாஷையிலான ஸ்ரீராமாநுஜ பத்ரிகையும் அவிச்சின்னமாக நடைபெற்று வருகின்றன. அடியேன் ஸர்வாத்மநா அசக்தனுயிருக்குமின்நிலையிலும் இவை குறையற நடந்தேறி வருவதை நினைக்குங்கால் உள்ளபடி பகவத் பாகவதாசார்ய க்ருபாபலமொன்றையே போற்ற முற்படவேண்டியதாகிறது.

இப்பத்ரிகைகள் மூலமாக அடியேனுக்கு நாற்றிசையிலும் ஸுஹ்ருத்துக்களும் ஆப்தர்களும் மலிந்திருப்பதனால் அன்னவர்கள் பலரும் அடிக்கடியளிக்கும் மங்கல வாழ்த்துக் கடிதங்களையே அடியேன் ஜீவாதுவாகக் கொண்டிருக்கிறேன். ஸமீபத்தில் நிகழ்ந்த ஓர் அற்புதமான நிகழ்ச்சியொன்றை உள்ளடங்காமகிழ்ச்சியுடன் உணர்த்துகிறேனிங்கு.

அடியேனுடைய பதினன்காவது பிராயத்தில் திருநாடலங்கரித்த திருத்தகப்பனர் தம்முடைய சிகித்ஸைக்காகத் தஞ்சாவூரிலிருந்து ஒரு முதலியாரை வரவழைத்திருந்தார். அவர் ஸித்தவைத்யரென்று புகழ்பெற்றவராம். அப்போது அவர்க்கு இருபது பிராயம்

நிரம்பியிராது. நமது க்ருஹத்திலேயே போஜனம் செய்துகொண்டு ஏழெட்டு மாதம் போல் தங்கியிருந்து சிகித்ஸை செய்து வந்தார். அவர் ஆங்கிலம் வல்லவர். அவரிடத்தில் ஆங்கிலம் கற்கும்படி திருத்தகப்பனார் அடியேனுக்குக் கட்டளையிட்டார். ஆங்கிலத்தில் மிகவும் வெறுப்புடையவர் திருத்தகப்பனார். அந்த பாஷையில் ப்ரவேச லேசமும் கூடாதென்று கடுமையாக ஸாதித்துக்கொண்டிருந்தவர் என்ன காரணத்தினாலோ அந்த சிகித்ஸகரிடத்தில் ஆங்கிலம் படிக்க நியமித்ததுமல்லாமல் அவரிடத்திலும் சொன்னார்— 'வைத்யரே! உம்முடைய சிகித்ஸையினால் எனக்கு யாதொரு பலனும் ஏற்படப் போகிறதில்லை; பையனுக்கு இங்கிலீஷ் சொல்லிக்கொடுத்த பெருமையையாவது நீர் அடைய வேண்டும்' என்று. சில மாதங்களே அவரிடம் ஆங்கிலம் கற்றேன். திருத்தகப்பனார் திருநாடலங்கரித்த பிறகு அவர் ஊர்போய்ச் சேர்ந்தார். இந்நிகழ்ச்சி அறுபத்து மூன்று வருடங்களுக்கு முற்பட்டது. அவருடைய நினைவு எனக்கு இருந்ததேயில்லை. இருக்க ப்ரஸக்தியுமில்லை.

மேற்செய்தி கேளுங்கள். நேற்று ஆனி மாத முடிவில் திருமலைக்கு விடைகொள்ள நேர்ந்தது. காலை 10 மணிக்கு நான் கோபுர வாசலுக்குள் நுழைகிறேன். அந்த வைத்ய முதலியார் பெருமாளை ஸேவித்துவிட்டுத் தடியை யூன்றிக்கொண்டு வெளியே வருகிறார். அவரை நான் இன்னாரென்று நினைக்க ப்ரஸக்தியில்லாமையாலே அவரைக் கணிசியாமல் சென்றுகொண்டேயிருக்கிறேன். அவர் என்னெதிரே வந்து வழி மடக்கி நின்று 'சுவாமிகளே! சௌக்கியமா?' என்றார். 'நீங்கள் யாரோ தெரியவில்லையே! எவ்வூர்? என்ன பெயர்?' என்கிறேன். தெரியவில்லையா? என்று இருமுறை கேட்டார். தெரியவில்லையேயென்றேன். உடனே W. N. K. L. என்றார். உடனே எனக்குக் கண்ணீர் பெருகிவிட்டது. ஆரத்தழுவிக்கொண்டேன். W. N. K. L. வரலாறு கேண்மின். அவர் எனக்கு (ஆங்கிலம் கற்பித்த காலத்தில்) எழுத்துப் பூட்டு ஒன்று கொடுத்தார். எழுத்துப் பூட்டென்பது அனைவருமறிந்ததே. அவர் எனக்குத் தந்த பூட்டில் உள்ள பல எழுத்துக்களில் W. N. K. L. என்கிற எழுத்துக்களை வரிசையாக நிறுத்தினால் பூட்டு திறக்கும். இப்பூட்டு அவரிடத்தில் 10, 12 வருஷமிருந்ததாம். என்னிடத்திலும் அது 30 வருடங்களுக்குமேலிருந்தது. இவ்வடையாளத்தை அவர் நினைவூட்டவே எனக்கு மயிர் சிலிர்த்தது. கேட்டேன் அவரை—உங்கள் நினைவு எனக்கில்லையே; 64 வருடங்கள் பொறுத்து என்னை நீங்கள் எங்ஙனம் தெரிந்து கொண்டீர்கள்? என்று.

அதற்கு அவர் சொன்னார்—நான் முப்பது வருஷமாக மதுரை ஸமீபத்தில் இருந்து வருகிறேன்; அக்கம்பக்கத்திலுள்ளவர்கள் பலர் உங்கள் புத்தகங்களையும் பத்ரிகைகளையும் தருவிக்கிறார்கள்; நானும் விடாமல் பார்ப்பதுண்டு; நீங்கள் தன் சரிதையில் என்னைப் பற்றிப் புகழ்ந்தெழுதியிருக்கிறீர்களே, அதையும் பார்த்திருக்கிறேன்; அடிக்கடி எனது நண்பர்களுக்கு அதையெடுத்துக் காட்டுவதுண்டு; சிலவூர்களில் உங்கள் சொற்பொழிவு களும் கேட்டிருக்கிறேன். சில வருஷ காலமாக உங்களுக்கு ஆரோக்யக் குறைவு என்பதையும் தெரிந்துகொண்டிருக்கிறேன்..... என்று சொல்லிவிட்டு முடிவில் ஒன்று சொன்னார்—நான் நேற்றே இவ்விடம் வந்தேன்; நேற்று மாலை சிலர் உங்கள் திருநாமத்தைச் சொல்லி அப்பனுக்கு அர்ச்சனை செய்வித்தார்கள்; அவர்கள் உங்களுடைய சிஷ்யர்களாம்; நீங்கள் இங்கு வந்திருப்பதையும் அவர்களாலறிந்தேன்—என்று. அப்போது *ஸ்த்ரியோ வ்ருத்தாஸ் தருண்யச் ச ஸாயம்ப்ராதஸ் ஸமாஹிதா:, ஸர்வாந் தேவாந் நமஸ்யந்தி ராமஸ்யார்த்தே யசஸ்விந:.* என்கிற ஸ்ரீராமாயண ச்லோகத்தை நினைத்து உடல் தடித்தேன், உள்ளம் பூரித்தேன். இத்தகைய பலபல அன்பர்களின் மங்களாசாஸன பலத்தினால் குறையொன்றுமின்றியே குதூஹலத்துடன் வாழ்ந்து வருகிறேன். ... ✽

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானர் ஜீயர் திருவடிகளே சரணம்.

# ஸ்ரீ தேசிக ஜயந்தி மலராராய்ச்சி.

[ஸ்ரீ காஞ்சீ. ஜகதாசார்ய. ப்ரதிவாதிபயங்கரம். அண்ணங்கராசாரியர் எழுதியது]

**ஸ்ரீவைஷ்ணவஜகத் யஸ்ய நாம ஸங்கீர்த்ய ஜீவதி,**
**ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் வேதாந்தார்யம் நமாமி தம்.**

1. திருவல்லிக்கேணியில் வாழும் பரமாப்தரொருவர் 29—11—68-ல் அடியேனுக்கொரு கடிதமெழுதினுர் "ப்ரியாவின் தேசிக ஜயந்தி மலரைக் கடாக்ஷித்ததுண்டோ? அதிலுள்ள அபத்தங்களேயும் அஸம்பத்தங்களேயும் ஆராய்ந்ததுண்டோ?" என்று. நான் அப்பத்திரிகையைப் பார்ப்பதில்லேயென்று விரதங்கொண்டு பதினைந்து வருடங்களுக்கு மேலாயிற்று; 'உங்கள் பத்ரிகையை எனக்கனுப்பவேண்டா' என்று கண்டிப்பாகத் தெரிவித்துப் பல வருடங்களாயின; ப்ரக்ருதம் நீர் கேட்டிருக்கிறபடி நான் ஒன்றும் பார்த்ததில்லே' என்று விடையளித்தேன். அதன்மேல் அவர் மீண்டுமெழுதினுர்— 'கொண்டிருக்கிற விரதம் நன்றே; ஆயினும் இந்த ஜயந்தி மலரை மட்டும் அவசியம் கடாக்ஷித்தேயாகவேண்டும்; அதை ஆராய்ச்சி செய்து லோகோபகாரம் செய்தேயாக வேண்டும்; இது நிர்ப்பந்தமான ப்ரார்த்தனே; நிராகரித்தருளலாகாது' என்று.

2. அதன் பிறகு அவர்க்கு எழுதினேன்—"ததாஸ்து, வேண்டுகோளே ஏற்றுக் கொண்டேன்; மலரென்ருல் அதில் பல வித்வான்களின் கட்டுரைகள் இருக்குமே; அந்த வித்வான்களின் பெயர் என் கண்ணில் படக்கூடாது; கட்டுரைகள் மட்டும் என் கண்ணில் படும்படி வித்வான்களின் பெயர் இருக்குமிடங்களேக் காகிதத்தினுல் பேர்க்கவும் பேராதபடி யொட்டி மறைத்து அம்மலர்ப் புத்தகத்தை யனுப்புவீராக" என்று. பிறகு அப்படியே அவரால் அனுப்பப்பட்டு 4—12—68-ல் அது எனக்குக் கிடைத்தது.

3. கட்டுரைகளே வாசிக்கும்போது புத்தகத்தைக் கீழே வைக்க மனமின்றி நெடுக வாசித்து முடிக்க ருசி விளேயவேணுமே; அது சிறிதுமுண்டாகவில்லே. மலரை அனுப்பினவர் எந்தப் பகுதிகளே அபத்தமென்றும் அஸம்பத்தமென்றும் கருதினுரோ, அந்தப் பகுதிகளில் மசியால் கோடிட்டிருந்தார்; அவற்றைப் பிறகு பார்த்துக்கொள்வோமென்று தள்ளிவிட்டு ஸ்தூலாவலோகனமாகச் சிலபல விடங்களே நோக்கினேன். ஸத்யமாக மனத்தில் தோன்றின வருத்தத்தை முன்னம் வரைகின்றேன். இம்மலர் ஒரு பெரிய மடத்தின் சார்பாக வெளிவந்துள்ளது; அத்தலேயில் வித்வான்களும் விவேகிகளுமான பெரியார் இருக்கமாட்டார்களா? கட்டுரைகள் எழுதினவர்களும், அவற்றைத் திருத்தின

வர்களும் கடாக்ஷித்தவர்களும் அபண்டிதர்களாகவா இருப்பர்கள்? வைஷம்யாஸ்பதமான விஷயங்களில் ஆக்ரஹத்தாலும் அபிநிவேசத்தாலும் நப்பாசைதப்பாசைகளாலும் எழுதுமவை கிடக்கட்டும். பொதுவாக, விவேகிகள் விமர்சிக்கக்கூடிய விஷயங்கள் என்றுண்டே; அவற்றிலுமா வருந்தத்தக்க விபரீதங்கள் நேரவேண்டும். எத்தனை யாயிரக்கணக்கில் பணச் செலவு செய்திருக்கிறார்கள்! இம்மலரை முழுவதும் ஆராய்ச்சி செய்து உள்ள குற்றங்குறைகளை வெளியிடுவோமாயின் நாமும் பலவாயிரக்கணக்கில் பணச் செலவு செய்ய நேரும். இதில் நம் மனம் சிறிதும் ஊக்கங்கொள்ளவில்லை. உலகம் வஞ்சிக்கப்படாமைக்காகச் சிலவே காட்டுவோம்.

4. "**பகைவர் விரும்பும் பண்பாளர்**" என மகுடமிட்டு ஒரு பண்டிதர் எழுதத் தொடங்குகையில் முதல் வரியே "ப்ரதமகபளே மக்ஷிகாபாத:" என்ன நின்றது. எழுதுகிறார்—

"கருணைக்கடலான காகுத்தனை ராவணன் *சத்ரோ: ப்ரக்க்யாத வீர்யஸ்ய*—பகைவர் பக்கலிலும் ப்ரஸித்த வீர்யமுடையவன் என்று புகழ்கிறான்" என்று.

இவ்வர்த்தத்தையே மேல் வாக்கியங்களினாலும் விவரிக்கிறார். அவ்யுத்பந்நர்களென்றும், அரைகுறை வ்யுத்பன்னர்களென்றும் சிலருண்டே உலகில்; அவர்கள் கடைவீதிப் புராணங்களில் இப்படி அர்த்தம் சொல்லக் கேட்டதுண்டு **சத்ரோ: ப்ரக்க்யாத வீர்யஸ்ய**=என்பதற்கு – சத்ருவிடத்திலுங்கூட ப்ரக்க்யாதமான வீர்ய முடையவர் பெருமாள் என்று அர்த்தம் எழுதுகிறவர் ஒரு வித்வானானால் இதை ஒருமுறை இரு முறை மும்முறை பார்த்துத் திருத்திக் கொடுத்தவர் எவ்வளவு வித்வானாக இருக்க வேண்டும். ஸம்ஸ்க்ருத பாஷையின் பரிஸ்திதி இப்படியா சீர் கெட்டுப் போகவேணும்! இராவணனுடைய வாக்கான விதில் **சத்ரோ:** என்கிற பதம் இராகவனையன்றே குறிக்கிறது. நமக்கு சத்ருவாயும், ப்ரக்க்யாத வீரியனாயும், விக்ரமை: ரஞ்ஜநீயனாயுமிருக்கிற என்று ஒவ்வொரு விசேஷணமும் இராம பிரானிடத்திலன்றோ அந்வயிப்பது. 'சத்ரௌ ப்ரக்க்யாத வீர்யஸ்ய' என்றோ, 'சத்ருஷு ப்ரக்க்யாத வீர்யஸ்ய' என்றோ இல்லையே.

5. இல்லாவிட்டாலென்ன? இப்படியும் பொருள் கொள்ள முடியாதோ? என்பர். ஏன் கொள்ள முடியாது? "யதி: பூஜ்யோ ந ஸம்சய:" என்பதற்கு "யதி: பூஜ்யோ ந, [யதியைப் பூஜிக்கக் கூடாது]; ஸம்சய:—அவருடைய நடத்தையில் ஸந்தேஹமுள்ளது. என்று அர்த்தம் கூறுவாருமுளரேயன்றோ. **ஸராஜ்யம் குருணா தத்தம்**=ராஜ்யத்தோடு கூடினதாக குருவினால் கொடுக்கப்பட்ட. என்று பொருள் கூறுவாரில்லையோ? **அறஞ்செயவிரும்பு**=அறம் என்கிற ஆயுதம் செய்வதற்கு இரும்பு வேண்டும் என்றுரைப் பாருமுளரே.

6. மேலும் எழுதுகிறாரிவர்-"ஸ்ரீராமசப்தம் ஈரரசுபடாதபடி" என்று தொடங்கி–ராமனென்பது எங்கும் தசரதராமனையே காட்டுவது போல் தேசிகரென்பது நம் தூப்புல் வள்ளலையே காட்டுமென்று. இங்கு த்ருஷ்டாந்தத்தோடு தார்ஷ்டாந்திகத்தோடு வாசிபற இரண்டும் அஸித்தம். யதிராஜஸப்ததியில் "சமிதோதயசங்கராதிகர்வ:" என்னும் சுலோகத்தில் "ராமாவரஜ:" என்றதில் பலராமனை விவக்ஷித்தே ராமசப்த ப்ரயோகம் செய்யப்பட்டது. முகுந்தமாலையில் ஹே ராமாநுஜ! என்கிறவிடமும் காண்க.

7. விளக்கொளி யெம்பெருமான் ஸன்னிதிக்கு ஆயிரமாண்டுகட்கு மேலாக தர்மகர்த்தாக்களாயிருந்து வரும் கைக்கிளவர்களின் குரு சொக்கலிங்க தேசிகர்—சிவஞான தேசிகர்—வெங்கட்டு தேசிகர் என்றிப்படி பெயர்பூண்டு அநாதிகாலமாக தேசிகரென்றே வழங்கப்பட்டு வருவது இற்றைக்கும் பிரசித்தம். அக்காலத்தில் ஒருவரிடம் இவர் தமிழ் கற்றதனால் இவர்க்கும் அந்த வ்யபதேசம் வழங்கி வருவதாயிற்று. இதன் உண்மை எப்படியாவது கிடக்கட்டும். ராமசப்தம் ஈரரசுபடவில்லையென்றது வ்யாஹதமேயன்றோ. இக்கட்டுரை முக்கியமாக *சத்ரோ: ப்ரக்க்யாத வீர்யஸ்ய* என்ற ராவணவசனத்திற்கு அபார்த்தம் செய்துகொண்டு உபக்ராந்தமாயிற்றாகையாலே அடிதொடங்கி முடியளவும் அபார்த்தமயமாகக் காண்கிறதென்று இதனை விட்டு மற்றொன்றுக்குச் செல்வோம்.

8. உலகத்தில் கார்யஸாமான்யத்துக்கும் மூவகைக் காரணங்களுண்டு; உபாதாந காரணம் ஸஹகாரி காரணம் நிமித்த காரணம் என்று. ஒரு மண் பானைக்கு மண் உபாதான காரணம்; தண்டம் சக்கரம் முதலானவை ஸஹகாரி காரணம். குயவன் நிமித்த காரணம். ஒரு துணி உண்டாக வேணுமானால் அதற்கு பஞ்சு அல்லது நூல் உபாதாந காரணம்; துரீவேமாதிகள் ஸஹகாரி காரணம். சேணியன் நிமித்த காரணம். இப்படி எங்குங் கண்டு கொள்ளலாம். எம்பெருமான் செய்கிற ப்ரபஞ்சஸ்ருஷ்டிக்கும் இம்மூவகைக் காரணம் வேணும். எம்பெருமானை நிமித்த காரணமாக ஒப்புக் கொண்டாலும் மற்ற இரு காரணங்கள் எவை? என்கிற விசாரத்தில் மூவகைக் காரணமும் எம்பெருமானேயென்று வேதாந்திகள் நிரூபிக்கிறார்கள். இதனை அச்யுத சதகத்தில் ஸ்வாமி "புரிஸபஹராணஸரீரோ" என்கிற ப்ராக்ருத ச்லோகத்தினால் சுருங்க உபபாதித்துக் காட்டுகிறார். இந்த ச்லோகம் இம்மலரில் பக்கம் 116ல் "காரணங்கள் நீ" என்ற மகுடத்தின்கீழ் எடுத்துக்காட்டப்பட்டு விவரிக்கப்பட்டுமுள்ளது. "உலகத்துக்கு இரண்டு காரணங்களுமே பகவான்" என்று முடிக்கப்பட்டுவிட்டது. இவர்களெடுத்த சுலோகத்திலோ வென்னில் மூவகைக் காரணங்களும் பகவானேயென்று ஸ்பஷ்டமாகக் காட்டப்பட்டிருந்தும் அந்தோ! பொருள் காணும் வழியறியாதாராய்த் திணறுகின்றனர்.

9. **"அச்யுத! உபாதாநம் பவஸி"** என்றதனால் உபாதாநகாரணத்வமும், **"ஸஹஸி நிமித்தத்வமபி"** என்றதனால் நிமித்தகாரணத்வமும் சொல்லப்பட்டது போலவே **"நிஜஸங்கல்பஸநாத:"** என்றதனால் ஸஹகாரிகாரணத்வமும் ஸ்பஷ்டமாகவே ஸாதிக்கப்பட்டிருக்கின்றது. ஸங்கல்பவிசிஷ்ட வேஷத்தாலே ஸஹகாரிகாரணமும் நீயேயாகிறாய் என்று வ்யக்தமாகக் கூறியுள்ளது. உண்மையில் பகவானுக்கு ப்ரபஞ்ச ஸ்ருஷ்டியில் ஸங்கல்பமேயன்றோ ஸஹகாரியாக வேதாந்திகளால் சொல்லப்பட்டுள்ளது. இதனை நம்மாழ்வாரும் *மழுங்காத ஞானமே படையாக* என்ற திருவாய்மொழிப் பாசுரத்தினால் காட்டியருளினர். மழுங்காத ஞானமென்பது ஸங்கல்பம். பாசுரம் வேண்டா. இங்குள்ள மூலஸ்ரீஸூக்தி போராதோ? அதன் பொருளைக் காணமாட்டாமல் "உலகத்துக்கு இரண்டு காரணங்களுமே பகவான்" என்று நிகமித்ததனால் தங்களுக்குள்ள வேதாந்த பரிசயத்தையும் விளக்கினார்களாயிற்று. இதுவும் சோசநீயமான மருள்.

10. மலரில் (பக்கம் 58ல்) "எப்படி ஆசார்யரானார்"? என்ற மகுடத்தின் கீழ் குருபரம்பராஸார ஸ்ரீஸூக்தியொன்றை எடுத்துக்காட்டி அதற்கு "ரஹஸ்யத்ரயஸாரம்—

குருபரம்பராஸாரம்'' என்று ஆகரம் காட்டியுள்ளது. இங்கு இருவகையான மருள்கள். ஒரு மருளைப் பலகால் நாமெடுத்துக்காட்டியிருந்தும் தெளிவு பிறக்கவில்லையந்தோ. ஸ்வாமி ஸாதித்த ரஹஸ்யத்ரயஸாரத்தோடு குருபரம்பராஸாரத்திற்கு எவ்விதமான தொடர்பும் கிடையாது. இரண்டும் தனித்தனி ரஹஸ்ய நூல்கள். குருபரம்பராஸாரம் ரஹஸ்யத்ரய ஸாரத்தின் முதலதிகாரமென்கிற மருள் அவிவேகிகளான பலர்க்கு முண்டு. விவேகிகளுக்குமுண்டு என்ன வேண்டியதாயிற்று. இதற்குக் காரணம் பரம்பரையாக இந்த க்ரந்தங்களில் அந்வயமில்லாமையேயாம். ''ரஹஸ்யத்ரயஸாரே ஸம்ப்ரதாய பரிசுத்தி:'' ''ரஹஸ்யத்ரயஸாரே ஸாரஸார:'' ''ரஹஸ்ய த்ரயஸாரே முநிவாஹநபோக:'' என்றால் எவ்வளவு பரிஹாஸ்யதையுண்டோ, அவ்வளவுண்டு 'ரஹஸ்யத்ரயஸாரே குருபரம்பராஸார:' என்றாலும். இந்த மருள் அவிவேகத்தினாலாகில் மாய்ந்து போக விரகுண்டு; கேவலம் துராக்ரஹத்தினாலென்பது தெரியவருவதால்மாயாது. இனி விதண்டா வாதமும் விளையக்கூடும். ''மூர்க்கச்ச மகரச்சைவ க்ருஹீதக்ராஹிணாவுபௌ'' என்பர்.

11. இங்கு இருவகையான மருளென்றோம்; ஒருவகை மருள் காட்டியாயிற்று. மற்றொரு வகையான மருள் கேளீர். எப்படி ஆசார்யரானார்? என்பது கேள்வி; அதற்கு விவரணம்-'நம்மாழ்வாருக்கும் நாதமுனிகளுக்கும் நடுவில் ஆயிரக்கணக்கான வருஷங்கள் கடந்திருக்க, ஆழ்வார் நாதமுனிக்கு எப்படி ஆசார்யரானார்'? என்று. உடனே ''இக்கேள்விக்கு ஸ்ரீதேசிகன் அருளிய ஸமாதானம்'' என்று மகுடமிட்டு குருபரம் பராஸார ஸ்ரீஸூக்தி உதாஹரிக்கப்பட்டுள்ளது. அதாவது, ''நாதமுனிகளுக்கு ஸ்ரீமதுரகவிகள் முதலாக உண்டான ஸம்ப்ரதாய பரம்பரையாலும் திருவாய்மொழி முகத்தாலும் யோகதசையிலே ஸாக்ஷாத்க்ருதராயும் நம்மாழ்வார் ஆசார்யரானார்'' என்று. இத்தகைய வாக்யஸந்நிவேசம் ஸ்வாமியினுடையதாக இருக்க ஔசித்யமே கிடையாது. உம்மையின் உபக்ரமமும் உபஸம்ஹாரமும் பொருத்த மற்றது. ''பரம்பரையாலும்... முகத்தாலும்'' என்ற உம்மைகளோடு சேரவேண்டில் ''யோகதசையிலே ஸாக்ஷாத் காரத்தாலும்'' என்றிருக்கவடுக்குமேயல்லது, ப்ரக்ரமபங்கத்திற்கும் அநந்வயத்திற்கும் ஆஸ்பதமாக இப்படிப்பட்ட வாக்யஸந்நிவேசம் ஸ்வாமி திருக்கையால் ஒருகாலும் அவதரியாது. மேலும் ''மதுரகவிகள் முதலாகவுண்டான ஸம்ப்ரதாய பரம்பரையாலும்'' என்றதும், 'திருவாய்மொழி முகத்தாலும்' என்றதும் அர்த்தமற்ற வார்த்தைகளேயாம். ''யோகதசையிலே ஸாக்ஷாத்க்ருதராய் நம்மாழ்வார் நாதமுனிகளுக்கு ஆசார்யரானார்'' என்னுமிவ்வளவே பர்யாப்தம்.

12. சங்கையென்ன? ஸமாதானமென்ன? என்று பார்க்கவேணும். ஆழ்வார்க்கும் நாதமுனிகளுக்குமிடையில் அத்யந்த காலவ்யவதான மிருக்கையாலே இவ்விருவர்க்கும் ஆசார்ய சிஷ்யபாவம் எங்ஙனே கூடிற்று? என்பது சங்கை. இதற்குப் பரிஹாரம் செய்ய வேண்டிய முறை— *வ்யோம்ந: பரஸ்தாத் ஸவிதம் ஸமேத்ய லக்ஷ்ம்யா நியோகாத் குருகாதிராஜ:, ஸமந்த்ரராஜத்வயமாஹ யஸ்மை நாதாய தஸ்மை முநயே நமோஸ்து* என்று ப்ரஸித்தமான நாதமுனிகள் தனியனால் ஸுப்ரஸித்தமான இதிஹாஸ விசேஷத்தைக் காட்டுவதேயாம். பூர்வாசார்ய க்ரந்தஸித்தமான அந்த இதிஹாஸம் வருமாறு:—

13. ஸ்ரீமந்நாதமுனிகள் தம் இருப்பிடந்தன்னில் மன்னனாரென்கிற எம்பெருமானுக்கு ஸகலவிதமான கைங்கரியங்களையும் செய்துகொண்டு வாழ்ந்தருளுங்காலத்தில்

அவ்விடத்திற்குத் திருநாராயணபுர ப்ராந்தத்தில் நின்றும் சில ஸ்ரீ வைஷ்ணவர்கள் வந்து மன்னனுர் ஸன்னிதியில் தங்களுக்குத் தெரிந்த ஸ்தோத்ரங்களையெல்லாம் அநுஸந்தித்துக் கொண்டிருக்கையில் நம்மாழ்வாரருளிச் செய்த திருவாய்மொழியில் *ஆராவமுதே அடியேனுடலம்* என்கிற பதிகத்தையும் செவிக்கினிய இசையுடனே அநுஸந்தித்தார்கள். அதில் முடிவு பாசுரத்தில் *குழலில் மலியச்சொன்ன ஓராயிரத்து ளிப்பத்தும்* என்று அவர்கள் அநுஸந்தித்ததைக் கேட்ட நாதமுனிகள், இப்படி ஆயிரம் பாசுரங்கள் அவதரித் திருப்பதாகத் தெரிந்ததனுல் அந்த ஸ்ரீ வைஷ்ணவர்களை நோக்கி "ஸ்வாமிகாள்! உங்களுக்கு ஆயிரம் பாசுரமும் முகபாடமாக வருமோ"? என்று கேட்டார். அவர்கள் இப்பத்துப் பாசுரந்தவிர வேறொரு பாசுரமும் அறியோம் என்று சொல்லிப்போனுர்கள். அதுமுதலாக நாதமுனிகளுக்கு இரவும் பகலும் இதுவே சிந்தையாயிற்று. "குருகூர்ச் சடகோபன் சொன்ன ஆயிரம்" என்று செவிப்பட்டபடியாலே அந்த சடகோபர் [நம்மாழ்வார்] திருவவதரித்த குருகூரிலே சென்று விசாரித்தோமாகில் அங்கே கிடைக்கக் கூடுமென்று கருதி எம்பெருமானிடம் விடைபெற்று ஆழ்வார்திருநகரிக்கு எழுந்தருளி பொலிந்து நின்ற பிரானையும் நம்மாழ்வாரையும் ஸேவித்து நிற்கையில், ஸ்ரீமதுரகவிகளின் சிஷ்ய பரம்பரையிலே ஒருவரான ஸ்ரீ பராங்குசதாஸரென்பவர் நேர்பட, அவரைத் தெண்டனிட்டுத் தாம் எழுந்தருளின கார்யத்தை விண்ணப்பஞ்செய்து "இவ்விடத்தில் ஆயிரமும் தெரிந்தவர்களுண்டோ? ஸ்ரீ கோசமாவது உண்டோ?" என்று கேட்க அதற்கு, அவர் சொன்னதாவது:— திருவாய்மொழியும் மற்றுமுண்டான திவ்யப்ரபந்தங்களும் பிரசாரம் மறைந்து நெடுநாளாகிவிட்டது; ஆனுலும் எங்கள் குலக்கொழுந்தான ஸ்ரீ மதுர கவிகள் அருளிச்செய்த *கண்ணிநுண் சிறுத்தாம்பு என்னும் பிரபந்தமுண்டு; அதனை திருப்புளியாழ்வார் திருமுன்பே ஆழ்வார் திருவடிகளைச்சிந்தித்துக்கொண்டு நியமத்துடனே பன்னீராயிரம் விசை ஜபித்தால் ஆழ்வார் அருள்புரியக்கூடுமென்று கேட்டிருந்ததுண்டு; என்றுர். அது கேட்ட நாதமுனிகள் திருவுள்ளம் தேறி ஆனந்தக் கடலில் மூழ்கின மனத்தராய் அவரைத் திருவடி தொழுது "ஸ்வாமிந்! அந்தக் கண்ணிநுண் சிறுத்தாம்பு பிரபந்தத்தை அடியேனுக்கு அநுக்ரஹித்தருள வேணும்" என்று விநயமுடன் வேண்ட, அவரும் திருவுள்ளமுவந்து இவர்க்கு அந்தப் பிரபந்தத்தைப் பாடம் செய்வித்தார். இவரும் அதிகரித்துத் திருப்புளியாழ்வாரடியிலே நியமமுடன் பன்னீராயிரம் முறை அந்தப் பிரபந்தத்தை யநுஸந்தித்துத் தலைக்கட்டினவாறே இவரது ஆர்த்திக்கு இரங்கின நம்மாழ்வார் திவ்யதிந்த்ரிணீவ்ருக்ஷத்தின் சாகையொன்றில் பத்மாஸநோபவிஷ்டராய் அசரீரிவாணி சொல்லுவது போல "உமது அபிமதம் இன்னதென்று தெரிவிக்கவேணும்" என்று சொல்ல, நாதமுனிகள் ஆனந்தக்கண்ணீர் பெருக நின்று கூப்பிய கையராய் "ஸ்வாமிந்! திருவாய்மொழி முதலிய திவ்யப் பிரபந்தங்களை அடியேனுக்கு ப்ரஸாதித் தருளவேணும்" என்று விண்ணப்பஞ் செய்ய, ஆழ்வாரும் பரமப்ரீதராய் அவர்க்கு திவ்யமான ஞானக்கண்ணைக் கொடுத்து ரஹஸ்யத்ரயத்தையும் நாலாயிர திவ்யப் பிரபந்தங்களையும் தர்சனத்தின் ஆழ்பொருள்களையும் அஷ்டாங்க யோக ரஹஸ்யத்தையும் யோக தசையிலே ப்ரஸாதித்தருளி அந்தர்த்தானமாயினுர்—என்பதேயாம்.

14. ஸ்வாமி ஸாதித்த ஸம்ப்ரதாய பரிசுத்தியில் "ப்ராதுர்ப்பாவ விசேஷத்தால் நாதமுனிகளுக்கு நம்மாழ்வார் ஆசார்யரானுர்" என்றுள்ள ஒரு வாக்கியத்தையெடுத்துக்

2

காட்டியிருந்தாலே போதும் சங்காபரிஹாரத்திற்கு. ''மதுரகவிகள் முதலாகவுண்டான ஸம்ப்ரதாய பரம்பரையாலும் திருவாய்மொழி முகத்தாலும்'' என்ற ஹேதூக்திகளிரண்டும் இன்னமும் சங்காஜனகமேயொழிய சங்காபரிஹாரகமாக வழியில்லை. இதற்குச் சிலர் செய்துள்ள விவரணங்களும் ''ஸ்திதஸ்ய கதிச் சிந்தநீயா'' என்கிற கட்டளையிலேயா மத்தனே. ''யோகதசையிலே ஸாக்ஷாத்க்ருதராயும்'' என்ற வாக்யத்தை ''ஸாக்ஷாத்க்ருதராய் உபதேசிக்கையாலும்'' என்று சேஷபூரணம் பண்ணி நிர்வஹிப்பதிற்காட்டிலும் மூலத்திலுள்ள விபர்யயத்தைத் திருத்தி ப்ரவர்த்திப்பித்தல் பாங்கு. ஸ்வாமி தாமே ஸ்தோத்ரபாஷ்யத்திலும்—''காலவிப்ரகர்ஷேபி பரமபுருஷ ஸங்கல்பாத் கதாசித் ப்ராதுர்ப்பூய ஸாக்ஷாதபி ஸர்வோபநிஷத் ஸாரோபதேஷ்டாரம்'' என்றருளிச் செய்துள்ளார். இதில் அபிசப்தம் வர்ஜநீயம்; மதுரகவி ப்ரஸ்தாவமும் அப்படியே.

15. ''மதுரகவிகள் முதலாகவுண்டான ஸம்ப்ரதாய பரம்பரை'' என்னும்படியாக ஒரு பரம்பரை கிடையவே கிடையாது. மதுரகவிகள் திருவம்சத்திலே பிறந்த வொருவர் ஆழ்வார் திருநகரியில் வாழ்ந்து வந்தவர் நாதமுனிகளுக்குக் கண்ணிநுண் சிறுத்தாம்பு பிரபந்தத்தைப் பாடம் செய்வித்தாரென்பது கொண்டு மதுரகவிகளிடமிருந்து ஒரு ஸம்ப்ரதாய பரம்பரை வந்ததாகக் கல்பிக்க வொண்ணுமோ? ''திருவாய்மொழி முகத்தாலும்'' என்பதற்கு என்ன அர்த்தமென்று கேட்டால் வாய் திறக்க வழியுண்டோ? நாதமுனிகள் நம்மாழ்வாரை யோகதசையில் ஸாக்ஷாத்கரித்த பின்புதானே அவர்க்குத் திருவாய்மொழியுபதேசம் ப்ராப்தமாயிற்று. ஆகவே ''கால விப்ரகர்ஷேபி பரமபுருஷ ஸங்கல்பாத் கதாசித் ப்ராதுர்ப்பூய ஸர்வோபநிஷத் ஸாரோபதேஷ்டாரம்'' என்ற ஸ்தோத்ர பாஷ்ய ஸ்ரீஸூக்திக்கிணங்கினதான ''யோகதசையிலே ஸாக்ஷாத் க்ருதராய் ஆசார்யரானார்'' என்கிற வாக்கியமொன்றுதான் ஸங்கதம். காலவிப்ரகர்ஷப்ரயுக்தசங்கை மதுரகவிகளிடத்தும் துல்யம்.

16. ஸ்வாமி யெழுதின ரஹஸ்ய நூல்கள் அவருடைய காலத்திலோ, அவருடைய வாழ்நாளுக்குப்பிற்பட்டு ஐந்நூறு வருஷ காலத்திலோ ப்ரசாரம் பெறவில்லை. பிள்ளை லோகாசார்யருடைய ரஹஸ்ய க்ரந்தங்களின் முன்னே மற்ற பலருடைய ரஹஸ்ய நூல்கள் பகல்விளக்கும் மின்மினியுமாயொழிந்தன. வாதிகேஸரி அழகிய மணவாளச்சீயர், ஆச்சான் பிள்ளை, சிறியயாமுனார்யர் முதலான ஏழெட்டு ஆசாரியர்களும் சிறியனவும் பெரியனவுமான ரஹஸ்ய நூல்களை யெழுதிவைத்திருந்தும் அவை எப்படி பிரசார மற்றிருந்தனவோ அப்படியேதான் ஸம்ப்ரதாய பரிசுத்தி முதலான ரஹஸ்யங்களும் ஏட்டளவிலே நின்றிருந்தன. ''புதுத் தெய்வங் கொண்டாடுந் தொண்டர்'' என்ற கலியன் ஸ்ரீஸூக்திக்கு இலக்கானவர்கள் தோன்றின பின்பு *மூலையிலே கிடந்தவற்றை முற்றத்திலேயிழுக்கிற கதையாக நேர்ந்தபோது அவை பலவகையான விகாரங்களுடன் வெளிப்பட்டன. இதில் விவேக குசலர்கள் ஸந்தேஹ லவலேசமும் கொள்ளார்கள்.

17. நவீனர்கள் பகவத் விஷய காலக்ஷேப மென்றும் ரஹஸ்ய காலக்ஷேப மென்றும் சொல்லவும் செய்யவும் தொடங்கினது என்றைக்கு? என்று கேட்டால் கண்ணாடிபோல் எடுத்துக் காட்டவல்லார் பலருளர். இதை நாம் பலபல நூல்களில் பரக்கவும் பன்னிப்பன்னியும் உலக முகக்க வரைந்திருக்கின்றோம். இந்நூல் தன்னிலும்

மேலே ப்ரகரண விசேஷங்களில் விரித்துரைக்க ஸந்தர்ப்பம் வாய்க்கும். ஸாரமாக ஒரே வார்த்தை—ஸ்வாமியின் ரஹஸ்ய நூல்களென்பவை இவர்களுக்குக் கண்டே கடு வென்னத்தகும், அவற்றை இவர்கள் எடுத்துக் காட்டுவதும் பிரசாரம் செய்வதும் இவர்களுடைய மனத்துக்கே லஜ்ஜாவஹம். முன்னுக்குப்பின் முரண்பட்டவையாயும் அநந்விதங்களாயுமுள்ள வாக்கியங்கள் ஒன்ரு இரண்டா? அவற்றை யொழுங்குபடுத்த இந்த யுகத்திலாகாதே. இப்படி நாமெழுதுவதை வாசிக்கும்போது சிலர்க்குக் கண்கள் சிவக்கும்; உதடு துடிக்கும்; கை கால் பதைக்கும். என்ன செய்வர்கள் பாவம்! ஒன்றும் செய்ய முடியாது. "பிள்ளை லோகாசாரியர் தேசிகனிடத்தில் ஆச்ரயித்து, *சீரொன்று தூப்புல் தனியன் ஸாதித்து உஜ்ஜீவித்துப்போனர்." என்றும், "அதை ஸஹியாதவர்கள் பாதரக்ஷகளைத் தோரண மாலையாக தேசிகன் திருமாளிகை வாசலிலே கட்டிவைத்து ஸ்வாமி தலையில் இடிக்கும்படி செய்தும், காலை வாரித் தெருவிலேயிழுத்துவிட்டும் பரிபவித்தார்கள்" என்றும் ஒருவர் மாறி யொருவராக எழுதிவைத்து ஸ்வகோஷ்டிகளில் குணலமாடித் திரியலாமத்தனே. இனி அடுத்த விஷயத்திற்செல்வோம்.

18. பக்கம் 37ல் "தூப்புல் வேதாந்த தேசிகனே இன்னும் ஒரு நூற்ருண்டிரும்" என்று மகுடமிட்டெழுதுகையில் "காஞ்சி மாநகரில் திருத்தண்கா என்னும் திவ்ய தேசத் துக்குப் பக்கத்தில் தூப்புல் என்னும் அக்ரஹாரம் இருக்கிறது, அதில் ஸ்வாமி அவ தரித்தார்" என்றுள்ளது. நமது பல நூற்களில் விரிவாக விளக்கப்பட்ட தூப்பில் வரலாற்றைக் கண்டபின் இங்ஙனேயெழுதுகிறவொரு நூதன பத்ததியைக் கைப்பற்றி யுள்ளார்கள். ஏழெட்டு மாதங்களுக்கு முன் வரையில் எழுதிவந்தவர்களில் ஒருவரும் **தண்கா** என்கிற சொல்லின் ப்ரஸ்தாவலேசமும் செய்ததில்லை. விளக்கொளியெம்பெரு மான் ஸன்னிதியையும், அதைச் சேர்ந்த பரிஸரத்தையும் ஆழ்வார்கள் **தண்கா**வென்று வழங்கியுள்ளார்களென்பதையும் இவர்கள் அறிந்தவர்களல்லர். இதனைக் குடப்பாம்பில் கையிட்டுரைப்போம். "ஆழ்வார்கள் திருவாக்கில் வந்த தண்காவென்னும் வ்யபதேசத்தை விட்டிட்டு, முந்நூருண்டுகட்குப் பிற்பட்ட காலத்தில் ஏற்பட்ட தும்பைவன அக்ரஹா ரத்தின் கொச்சைப் பெயராகத் தோன்றிய தூப்பலென்னுஞ் சொல்லைக் கையாள்வது எதற்காக?" என்று நாம் நூறுவிசை கேட்டிருக்கிற கேள்விக்கு நேர்முகமாக விடை யிறுக்கமாட்டாமல் "தண்காவென்னும் திவ்யதேசத்துக்குப் பக்கத்தில் தூப்புல்" என்று இப்போதாக எழுதக் கிளம்பினர்கள். அந்தோ ஒரு லாபமுமில்லையே.

19. விவேகிகாள்! விரிவாகக் கேண்மின். ஸ்ரீகாஞ்சீபுரியில் திருவெஃகா திருவட்டபுயகரம் திருவேளுக்கை திருத்தண்கா ஆகிய இந்நான்கு திவ்ய ஸ்தலங்களும் ஒன்றுக்கொன்று அதிஸந்நிஹிதங்கள். [பாஷாந்தரத்தாலே தெரிவிப்போம். இவை நான்கு ஸ்தலங்களும் ஒரு பர்லாங்குக்கு உட்பட்டவை.] இந்த நான்கு ஸ்தலங்களிலும் இந்தத் திருநாமங்கள் தவிர வேறொரு திருநாமம் நடையாட ப்ரஸக்தியே கிடையாது. (ஸ்ரீவைஷ் ணவரல்லாதாரைப்பற்றி இங்கு விசாரயில்லை.) திருவெஃகாவில் அவதரித்த பொய்கை யாழ்வாரை *கச்சிநகர் வந்துதித்த பொய்கைப்பிரான்* என்று கூறி *திருக்கச்சி மாநகரம் செழிக்கவந்தோன் வாழியே* என்றுதான் வாழ்த்துகிருர்கள். *திருக்கச்சிவெஃகாவில் திகழ்ந்துதித்தோன் வாழியே* என்ருலும் குற்றமில்லை. ஆனல் அந்த பரிஸரத்திற்கு

'மேட்டுப்பாளையம்' என்கிற வ்யபதேசம் சிலநூற்றாண்டுகளாகவுண்டு; அதையிட்டுப் போற்றுவாரில்லை. அதே போல வேதாந்தாசிரியரைப்பற்றிச் சொல்லவேணுமானால் 'கச்சியிலவதரித்த' என்றோ, 'தண்காவிலவதரித்த' என்றோ சொல்லவடுக்குமேயல்லது மற்றொரு க்ராம்யமான பெயர் வந்துபுக வழியுண்டோ? கிடையாது.

20. "திருத்தண்கா என்னும் திவ்ய தேசத்துக்குப் பக்கத்தில்" என்கிறாரே இப் பண்டிதர், தண்காவுக்குப் பக்கமாக விவக்ஷிதமான இடம் எது? என்று கேட்டால் வாய் திறக்க வழியுண்டோ? விளக்கொளி ஸன்னிதியைச் சார்ந்தவிடம் திருத்தண்கா என்னுந் திருநாமத்தை விட்டு வேறொரு பெயரை ஸஹிக்குமோ? எப்படி ஸஹிக்கும். முதலி யாண்டான் திருவவதரித்த ஸ்தலம் பச்சைபெருமாள் கோயிலென்பது. இப்போது அதைப் பேட்டையென்று வழங்கி வருகிறார்கள். பேட்டை முதலியாண்டானென்று யாரேனும் சிஷ்டர்கள் வழங்குவார்களோ?

21. திருநாங்கூர்த் திருத்தேவனார் தொகையை மாதவப்பெருமாள் ஸன்னிதி யென்றும் பெரியார் வழங்குவர். கீழச்சாலையென்று சிலர் சொல்லுவதுண்டாகிலும் அது பவித்திரமான ஏட்டிலேறுமோ? ஆழ்வார்திருநகரி நவ திருப்பதிகளிலொன்றான வரகுண மங்கையை நத்தமென்று சாமானியர் வழங்கினால் அஃது ஏட்டிலேறுமோ? ஆழ்வார் திருவாக்கில் அவதரித்த திருநாமமிருக்க அதைவிட்டு வேறொன்றையிட்டு வழங்கக் கண்டால் அதைப்பற்றின மருமத்தை ஆராய வேண்டாவோ? வேதாந்தவாசிரியர்க்கு முற்பட்ட காலத்திலோ, அவருடைய காலத்திலோ, அவர்க்கு இருநூறு முந்நூறாண்டு பிற்பட்ட காலத்திலோ தூப்பல் என்கிற பேச்சே கிடையாது. *தலையறுப்புண்டுஞ் சாகேன் சத்தியங்காண்மினையா* என்கிற முறையில் சபதம் பண்ணிச் சொல்லுவேனிதை.

22. வேதாந்தவாரியர்க்கு வெகுகாலம் பிற்பட்டவரான அப்பய தீக்ஷிதர் காஞ்சியில் வந்து சிலபல காலம் வாஸஞ் செய்தார். அவர் இதர ஸ்தலங்களில் அக்ர ஹார ப்ரதிஷ்டைகள் செய்திருப்பதுபோல இத்தலத்திலும் செய்யவிரும்பிச் செய்து தலைக் கட்டினார். அவர் வீரசைவராகையாலே சிவபிரானுக்கு உகப்பான தும்பையையிட்டு அவ்வக்ரஹாரத்திற்குத் தும்பைவனமென்று நாமகரணஞ் செய்தார். அது நாளடைவில் துப்பல் தூப்பில் தூப்பல் என்று பலவாறு கொச்சைநாமம் பெற்றது. நவீனர்களென்று விச்வப்ரஸித்தமான விருது பெற்றவிவர்கள் ஆழ்வார் ஸ்ரீ ஸூக்தியங்வயமின்றிக்கே யிருந்தவர்களாகையாலே திருத்தண்காவென்பதில் வ்யுத்பத்தியில்லாமையாலே அக்காலத்தில் தங்கள் காதில் விழுந்த தூப்பலைப் பற்றிக்கொண்டு இதிஹாஸ புராணங்கள் தொடுக்கத் தொடங்கிவிட்டார்கள். பிரளயத்திலுமழியாத உண்மை இதுவே காணீர்.

23. ப்ரக்ருத பண்டிதர் திருத்தண்காவுக்குப்பக்கமான தேசமென்றெழுதுகிறாரே, அந்த தேசம் எது? நேரில் வந்து இன்னதென்று காட்டுவீரா? என்று கேட்போம். விளக்கொளியெம்பெருமான் ஸன்னிதியின் எல்லைக்கு உட்பட்டதென்கிறாரா? புறம்பு பட்டதென்கிறாரா? உட்பட்டது தானென்னில், அது திருத்தண்காவே யொழிய வேறொன்றுமன்று என்பது தூர்ய கோஷத்துடன் தேறிநிற்கும். புறம்புபட்ட தென்னில், திருவயிந்திரபுரத்தில் ஸ்வாமி திருமாளிகையென்று ஒரு க்ருஹத்தை ஆதரிப்பது

போல, அதைவிட முக்கியமான இவ்வவதார ஸ்தலத்தில் ஸ்வாமியின் ஜன்மபவனத்தைக் கண்டறிந்து அதற்கன்றோ சேமக்காப்புகள் செய்யவேண்டும். இப்போது ஸ்வாமி ஸன்னிதியாயிருக்கிறவிடமோ பரகாலமடமாக விருக்குமிடமோ இரண்டத்தொன்றுதான் தேசிக பவனமென்னில் *கட்ட குட்யாம் ப்ரபாதமென்று முடிந்தது.

24. ஆக, தூப்புலென்கிற இச்சொல்லைக்கொண்டே இவர்களது நவீநபக்ஷத்வம் கரதலாமலகமாக விளங்குகையாலே இதை இவர்கள் மறுக்க மிகமிகப் பாடுபடவேண்டியது அவசியமாகிறது. எத்தனை பாடுகள் பட்டாலும், ஏழேழ்பிறவி கோரமா தவம் புரிந்தாலும் பொய்யை மெய்யாக்க முடியாது. உலகத்தில் விளங்கும் அக்ரஹாரங்களோ க்ராமங்களோ எத்தனை விதமான ஏடுகளில் ஏறியிருக்கின்றன தெரியுமா? வைதிகங்களாயும் லௌகிகங்களாயுமுள்ள ஏடுகளில் ஏருத அக்ரஹாரமோ க்ராமமோ கிடையவே கிடையாது. காஞ்சீபுர ஸமீபத்தில் தேனம்பாக்க மென்றொரு க்ராமம்; அதுவுங்கூட வன்றோ ஏடேறி விளங்குகின்றது "தேனைவேதியர் தெய்வமொன்றே" என்று. தூப்புலென்று சொல்லுமிடம் ஸ்வாமியின் திருவவதாரஸ்தலமாயிருந்தால் எத்தனை யேடுகளில் ஏறியிருக்கும் தெரியுமா? விளக்கொளி கோயில் விஷயமாகக் கிளர்ந்த வியாஜ்ஜியங்களோ ஒன்றிரண்டல்ல, பலபல. அவற்றில் ஒன்றிலாவது தூப்புல் பேச்சு உண்டோ? விளக்கடி கோவில் என்றல்லது வேறு பேச்சில்லையே.

25. இப்படி நாமெழுதுமவற்றைச் சீறிச்சிவந்த கண்ணினராய்க் கண்டு ஸம்ப்ரமிக்கவோ ஸம்ரம்பிக்கவோ தடையிராது. 'இது இவர் பலகால் எழுதினதுதானே, பழம் பாட்டுதானே, புதிய விஷயமன்றே' என்று கூறியொழிவர். துர்வாதங்கள் விளையும் போதெல்லாம் யதார்த்த கீர்த்தனம் வெளிவருவது லோகக்ஷேமங்கரமேயாகும். அஸம்பத்த ப்ரலாப ப்ரபஞ்சன ப்ரயாஸத்தை அறவே விட்டிட்டு "தேசிகனுக்கு மேற்பட்ட வித்வானில்லை, தேசிகனுக்கு மேற்பட்ட தர்சனஸ்தாபகரில்லை, தேசிகனுக்கு மேற்பட்ட ஆசார்யரே கிடையாது' என்று ஆயிரந்தடவை யெழுதினுலும் கேட்பாருண்டோ? தாங்கள் நேற்று காலையோ நேற்று மாலையோ தேசிகனையறிந்த நபர்களென்பதை நெஞ்சார அறிந்துவைத்தும் அத்யந்தம் அநவஸரமாக இதராசாரியர்களைப் பிடித்திழுத்துக் கற்பனைக் கதைகளை யெழுதிவைப்பது எவ்வளவு ஸாஹஸம்! இதில் பண்டிதர்களோடு பாமரர்களோடு வாசியில்லையே. உலகில் எத்தனையோ ஆசாரியர்களுக்கு வைபவ ப்ரசம்ஸைகள் தோன்றியிருக்கின்றனவே; இதராசார்ய தூஷணங்கள் மலிந்த ப்ரபாவ ப்ரசம்ஸை தேசிகனொருவர்க்குத்தானு அமையவேண்டும்? நவீனர்களான தாங்கள் ஸ்வச்சந்தமாகச் செய்யும் ஆசார்ய நிந்தைகளை தேசிகன் திருவடிகளிலன்றோ ஏற்றிவிடுகிருர்கள். இப்போது நாம் ஆராயும் ஜயந்தி மலரில் அஸம்பத்தங்களையெல்லாம் அபரிமிதமாக வரைந்து தள்ளி, முடிவில் (பக்கம் 206ல்) "ஆதாரம்-த்ருதீய ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ரஸ்வாமி அருளிய மூவாயிரப்படி குருபரம்பராப்ரபாவம்" என்றெழுதிவைத்துள்ளார்கள். தேசிகனவதார வருஷத்தில் போராட்டம்; அவர் பரமபதித்த ஊர் இன்னதென்பதில் பிரபலமான போராட்டம். இந்த அழகுக்கு ஆதாரங்காட்டுகிற வெட்கக்கேடு ஒன்று. "தேசிக சரித்திரத்தில் வேறுபாடுகள் புகுந்துவிட்டது வாஸ்தவந்தான்" என்கிருர் உப்பிலியப்ப நவநீதர். எல்லாம் க்ரமேண ஆராயப்படுமிதில்.

26.

# ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சன ப்ரதர்சனம்

நேற்று நவம்பர் முடிவில் வெளிவந்த ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சன பத்ரிகையில் வெளிவந்திருக்குமொரு அரிய பெரிய விஷயம் இந்த ஸந்தர்ப்பத்தில் இங்கெடுத்துக் காட்டவேண்டியது அவசியமாகிறது. அதில் 3, 4 பக்கங்கள் இவை:—

## தென்கலை வடகலை ஒற்றுமை

சென்ற இதழில் புத்தக விமர்சனப் பகுதியில் தென்கலை வடகலை ஒற்றுமையைப் பற்றி நாம் எழுதியிருந்ததைப் பாராட்டியும், ஆமோதித்தும் பல அன்பர்கள் நேரிலும் கடிதம் மூலமும் கருத்துக்களைத் தெரிவித்துள்ளனர். இவற்றுக்கு சிகரம் வைத்தது போல் நாம் எதிர்பாராத கடிதம் ஒன்று வந்தது. ஸ்ரீ உ.வே. V. D. ராமஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி சென்னையிலுள்ள வடகலைப் பிரமுகர்களில் ஒருவர். ஸ்ரீ தேசிகன் ஏழாவது நூற்றாண்டு விழா சென்னை மத்தியக் குழுவின் பொதுக்காரியதரிசி பதவியை வஹித்து, வெள்ளி மணியை பாரததேசமெங்கும் எழுந்தருளச் செய்யும் பெரும்பணியை நிர்வஹித்தவர். அந்த ஸ்வாமியின் ஆங்கிலக் கடிதத்தையும், அதன் தமிழ் மொழி பெயர்ப்பையும் கீழே தருகிறோம்.

SRI RAMA SADANAM, 10, Alamelumangapuram,
Madras-4, 29-10-68.

Dear Sri Krishnaswamy Iyengar,

I read your Justifiable and dignified criticism of the souvenir of the committee of which I was general secretary. After I successfully conducted the ghanta tour, I had practically dissociated myself from the committee due to differences. The publication of the souvenir in the manner in which it has been done was one of the main reasons for my submitting resignation forthwith a week before the 2nd Oct., the Tirunakshatram day. The purpose of this letter is to say that I had nothing to do with the souvenir and that I object more strongly than you have done, to the publication of offensive articles. With my best regards.

Yours sincerely,
(Sd.) V. D. RAMASWAMY.

P. S. I will have no objection if you publish this letter.

(அடுத்த பக்கமும் இதன் தொடர்ச்சி)

## ஆங்கிலக் கடிதத்தின் மொழிபெயர்ப்பு

ஸ்ரீராம ஸதனம், 10, அலமேல்மங்காபுரம்,
சென்னை-4, 29-10-68.

அன்புள்ள ஸ்ரீ க்ருஷ்ணஸ்வாமி அய்யங்கார் அவர்களுக்கு,

நான் பொதுக்காரியதரிசியாயிருந்த மத்தியக் குழுவினரால் வெளியிடப்பெற்ற மலர் பற்றித் தாங்கள் நியாயவுணர்ச்சியோடும் பண்போடும் குற்றஞ்சாட்டியிருப்பதை படித்தேன். திருமணி யாத்திரையை வெற்றியுடன் முடித்த பிறகு கருத்து வேற்றுமை காரணமாக நான் மத்தியக் குழுவோடு எனக்குள்ள தொடர்புகளை பெரும்பாலும் கைவிட்டுவிட்டேன். அக்டோபர் 2-ம் தேதி நடக்கவிருந்த திருநக்ஷத்திர தினத்திற்கு ஒருவாரம் முன்னதாகவே நான் என் ராஜிநாமாவை ஸமர்ப்பித்ததற்கு முக்கிய காரணங்களில் ஒன்று மலரைக் குழுவினர் வெளியிட்டிருக்கும் முறையேயாகும். அந்த மலரோடு எனக்கு எவ்விதமான தொடர்பும் கிடையாது என்பதையும் நான் தங்களை விட அதிகமாக அந்த மலரிலுள்ள ஆட்சேபிக்கத்தக்க கட்டுரைகளை ஆட்சேபிக்கிறேன் என்பதையும் வலியுறுத்தவே நான் இக்கடிதம் எழுதுகிறேன். தங்களுக்கு என் மரியாதைகள்.

தங்கள் அன்புள்ள,
V. D. ராமஸ்வாமி.

**பின்குறிப்பு:** நீங்கள் இக்கடிதத்தை வெளியிடுவதுபற்றி எனக்கு ஆட்சேபமில்லை.

## ஸுதர்சனம் ஆசிரியரின் குறிப்பு

தென்கலை வடகலைக் கருத்துவேற்றுமைகளையும், ஸித்தாந்த பேதங்களையும் காரணங்காட்டிப் பண்போடு தெரிவிப்பதில் தவறில்லை. கீழ்த்தரமாகத் தாக்குவதே தவறு. இப்படித் தாக்குகிறவர்களைக் கண்டிக்க, அந்தந்த ஸம்பிரதாயச் சண்டைகள் குறைந்து, சகிப்புத்தன்மை வளர்ந்து ஸ்ரீ வைஷ்ணவ மதம் செழிக்கும். தம்மவர்களென்னும் அபிமானம் கொள்ளாமல், தவறை தைரியமாகக் கண்டிக்க முன்வந்த ஸ்வாமி திறத்தில் ஸ்ரீ வைஷ்ணவ சமூஹம் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளது."

27. ஆரியர்காள்! ஸ்ரீவைஷ்ணவஸுதர்சன பத்ரிகையின் ஐப்பசி மாத இதழில் ராப்பர் மூன்ருவது பக்கத்தில் **புத்தக விமர்சனம்** என்ற தலைப்பில் "31, பாலாஜி நகர், சென்னை-14. என்னும் விலாசத்தில் கிடைக்கக் கூடியதாய் பத்து ரூபா விலையுள்ளதாய் ஏழாவது நூற்ருண்டு விழா மத்தியக் குழுவினரால் சுமார் ஆயிரம் பக்க முள்ளதாக ஒரு மலர் வெளியிடப்பட்டதாயும், அதில் தென்ஞசார்ய ஸம்ப்ரதாய ஸ்தர்களைக் கீழ்த்தரமாகத் தாக்குங் கட்டுரைகள் மலிந்திருப்பதோடு அச்சுப் பிழைகளும் ஏராளமாக இருப்பதாகவும், ஸ்ரீதேசிக பக்தர்களாகத் தங்களைப் பறைசாற்றிக்கொள்ளும் அறிவாளிகள்

பலர் சேர்ந்து வெளியிட்டிருக்கும் இம்மலர் இத்தனை பிழைகள் மலிந்து கீழ்த்தரமாக அமைந்திருப்பதற்கு விவேகிகள் மிகவும் வருந்துவதாயும் கண்டிருக்கிறது. அதன்மேல் தான் ஸ்ரீமத். V. D. ராமஸ்வாமி ஐயங்காரென்கிற பெரியார் மேலே விவரித்தபடி அதர்க்கணமான மலரைக் குழுவினர் வெளியிட்டது காரணமாகவே தாம் அக்குழுவை விட்டு முன்னமே விலகிக்கொண்டதாகவும் ஸ்ரீஸுதர்சன பத்ராதிப ஸ்வாமிக்கு மிகுந்த ஆர்ஜவத்துடனும் அநுதாபத்துடனும் தெரிவித்திருக்கிறார். இக்காலத்திலும் இத்தகைய ஸாத்விக ப்ரக்ருதிகள் சிலர் விளங்கி வருவது கண்டு நாம் உள்ளம் பூரிக்கிறோம். பத்து ரூபா விலையுள்ள அந்த பூதிகந்த மலரை நாம் பார்க்க விரும்பவுமில்லை, பார்க்கப் போகிறதுமில்லை. V. D. R. ஸ்வாமியின் கடிதமே அதற்குக் கண்டனமாயிற்று. விதிவசாத் பார்க்க நேர்ந்தவொரு மலரின் ஆராய்ச்சியை ஒருவாறு முடிப்போம்.

28. ஈ எறும்பு கொசு மூட்டைப் பூச்சி ஆகிய இந்த நான்கு அற்ப ஜந்துக்கள் பரஹிம்ஸைக்காகவே தோன்றுவதுபோல ஸதாசார்ய நிந்தைக்கும் ஸஜ்ஜன ஹிம்ஸைக்கு மாகவே தோன்றியுள்ள நபர்கள் வேறு என்னதான் செய்ய முடியும்? வேதாந்தவாரி யர்க்குத் தாங்கள் சொல்லும் பெருமைகள் அவருடைய ஸ்ரீஸூக்திகளுக்கும், ஸம்ப்ரதி பந்நர்களான மஹான்களின் ஸ்ரீஸூக்திகளுக்கும் விருத்தமென்பதை நன்கு தெரிந்து கொண்டிருந்தும் பலகால் தெரிவித்துங்கூட மானத்தில் த்ருஷ்டியின்றிக்கே மனம்போன படியே எழுதி வருகின்றார்கள். இப்போது நம்மால் ஆராயப்பட்டுவரும் கட்டுரையிலும் (பக்கம் 38ல்) ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரபிருதம் ஸ்ரீரங்கநாச்சியாரால் அளிக்கப்பட்டதாக வரையப்பட்டுள்ளது. ஸ்வாமி தாமே ஸ்தோத்ர பாஷ்யாவஸாநத்தில் "அகணி ஸதஸி ஸத்பிர் யஸ் ஸமஸ்யாஸஹஸ்ரீ கவிகதகம்ருகேந்த்ரஸ் ஸர்வதந்த்ரஸ்வதந்த்ர:" என்கிற ஸ்வகீயச்லோகத்தினால் ஸதஸ்யர்கள் தம்மை ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரராக கணித்ததாய் ஸ்பஷ்டமாகக் கூறியுள்ளார். இந்த விருதை திவ்ய தம்பதிகளிருவரும் சேர்ந்து கொடுத்தார்களென்றாலும் யாருக்கும் யாதொரு ஹாநியுமில்லை. ஆனால், ஸ்வாமியின் ஸ்ரீஸூக்திக்கு விருத்தமாகப் பேசுகிறவர்கள் இவர்கள் என்பதை மூதலிக்க இது எடுத்துக் காட்டினபடி. இந்த கற்பனைக்குச்சேர மற்றொரு கற்பனையும் செய்திருக்கிறார்கள்— *அபி தத்ஸஹதர்மிணீ க்ருபாத்தாகிலதந்த்ரப்ரபுதாக ஏஷ ஸூரி:* என்று. சந்த்ரா லோகத்தில் மித்த்யாத்யவஸிதி யென்று ஓர் அலங்காரம்; அதற்கு லக்ஷணம் "கிஞ்சிந் மித்த்யாத்வஸித்த்யர்த்தம் மித்த்யார்த்தாந்தரகல்பநம்" என்பது. இவர்களது திரளில் இவ்வலங்காரமே ப்ரசுரம். ஒரு பொய்யை ஸ்தாபிக்க ஒன்பது புளுகு; முடிவில் அத்தனையும் புளுகு. என்பதில் ஸந்தேஹமில்லை.

29. விசிஷ்டாத்வைத தர்சன ஸ்தாபகர்கள் எம்பெருமானார்க்குப்பின் [அவருடைய ஸமகாலத்திலும்] கூரத்தாழ்வான் பட்டர் திருக்குருகைப்பிரான் பிள்ளான் நஞ்சீயர் நம்பிள்ளை எங்களாழ்வான் பிள்ளை லோகாசாரியர் நடாதூரம்மாள் முதலான ஆசாரியர்கள் மத்தகஜங்களாகவும் கண்டீரவங்களாகவும் விளங்கினார்கள். ஆனால் அவர்களுடைய திவ்யக்ரந்தங்களில் ஸ்ரீபாஷ்யகார திவ்யஸூக்தி திரஸ்காரமோ பரஸ்பர விருத்த ஸ்வோக்தி விந்யாஸங்களோ காணமுடியாது. ஸ்வாமி ஸ்ரீஸூக்திகளில்தான் அவை ஸுபிக்ஷமாக விளங்குகின்றனவென்னும் காரணத்தினால் பகவத் ராமாநுஜதர்சனத்தில் ஸ்வாமிக்குத்தான் அக்ரஸிம்ஹாஸநாதிபத்யமென்பது மறுக்கவொண்ணாத விஷயமே.

யதார்த்த கீர்த்தனத்தை எத்தனை தடவை செய்தாலும் ஏற்குமாகையாலே புநருக்தி தோஷத்தைக் கணிசியாமல் பண்டிதவுலகம் தெளிவு பெறுவதற்காக மீண்டும் மீண்டும் விவரிக்க விரும்புகின்றேன். அந்த விவரணம் மேலே ப்ரகரணாந்தரத்தில் ப்ராப்தமாகும்.

30. அடுத்தபடி (பக்கம் 39ல்) எழுதியுள்ளதாவது-"எம்பெருமானார் தர்சனத்தில் தேசிக ஸம்ப்ரதாயம், தென்னாசார்ய ஸம்ப்ரதாயம் என்று இரண்டு ஸம்ப்ரதாயங்கள் இருந்து வருகின்றன. ஸ்ரீதேசிகனருளிச்செய்துள்ள அனேக ஸம்ப்ரதாய (ரஹஸ்ய) க்ரந்தங்களைப் பின்பற்றி நடப்பவர்கள் தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்கள்—வடகலையார்கள்" இத்யாதி. இவர்கள் இத்தகைய வார்த்தைகளால் சிலகாலமாகச் சிலபல பாமரர்களை வஞ்சித்து வருகிறார்கள். என்னுடைய நூற்றுக்கணக்கான நூல்களையும் வியாஸங்களையும் கண்டு கண்ட பாடமும் செய்திருப்பவர்கள் இந்த மாயப் பேச்சுக்களால் ஒருபோதும் மயங்கார்கள். ப்ரக்ருத விஷயத்தில் என்னுடைய பல நூல்களின் ஸாரத்தை இங்கு ஸம்க்ஷேபிக்கிறேன்.

31. ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் முதலான ஸ்ரீவைஷ்ணவாசாரியர்களனைவரும் தென்னாசாரியர்களெனப்படுவர். சக்ரவரத்தி திருமகனார் அகஸ்த்யாச்ரமத்தருகேயெழுந்தருளும்போதும் இளைய பெருமாளை நோக்கி *தக்ஷிணா திக் க்ருதா யேந சரண்யா புண்ய கர்மணா* என்று அகஸ்திய முனிவர் பெருமையைக் கூறுகின்றார். குலசேகராழ்வார் பெருமாள் திருமொழியில் அகஸ்திய முனிவரை "வண்டமிழ்மாமுனி" என்றே வ்யப தேசிக்கிறார். தேசிகனும் த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்னாவளியில் "ஸாச அகஸ்த்ய ப்ரஸூதா த்விதி பரிஜக்ர்ஹே" என்றும், பாதுகாஸஹஸ்ரத்தில் "கும்பீஸம்பூதோராஸம்பூர கபலக்ராஸிநஸ் ஸ்வைர பாஷா" என்றும் பெருமதிப்புத் தோற்றப் பேசியுள்ளார். ஆக, ஆழ்வார்களின் ஸம்ப்ரதாயத்தில் ஊற்றமுள்ள ஸ்ரீ வைஷ்ணவாசாரியர்களனைவரும் தென்னாசார்யர்களென்கிற வ்யபதேசத்திற்குப் பாத்திரமாயினர். இதற்கு ப்ரதிகோடிகளாகச் சொல்லத்தக்கவர்கள் திவ்யஸூரி—திவ்யப்பிரபந்த—திவ்யதேசங்களில் அவகாஹனமும் மதிப்பு மற்றவர்களான ஸ்மார்த்த மாத்வாதிகளே யாவர். அவர்களைத் தவிர்த்த ஸ்ரீ வைஷ்ணவாசாரியர்களுக்கெல்லாம் தென்னாசார்யர்களென்கிற வ்யபதேசம் நிர்விசேஷமாகவுள்ளது. வேதாந்த தேசிகனுட்பட ஸகலாசாரியர்களுக்கும் இந்த வ்யபதேசம் ஸமமானதென்பது தத்துவமுணர்ந்த பெரியார்களுக்கு உடன்பாடு.

32. வேதாந்த தேசிகனும் தென்னாசார்ய வகுப்பில் அந்வயித்தவரேயொழிய அவர்க்கென்று தனியேயொரு வகுப்பிருந்ததாக நினைப்பது நியாயத்திற்குச் சேராது. தென்னாசார்யர்களாலேயே தொன்று தொட்டுப் பரிபாலிக்கப்பட்டு வருகிற திவ்ய தேசங்கள் பலவற்றில் அவருடைய திவ்யமங்கள விக்ரஹம் ப்ரதிஷ்டை பெற்றும் உத்ஸவாதிகளைப் பெற்றும் வருவது அபலபிக்க முடியாதது. திவ்யதேசங்களில் ஸன்னிதிக்கு வெளிப்பட்ட விடங்களில் அவர்க்கு ஆலய நிர்மாண—மஹோத்ஸவோ பலாலனாதிகள் ஆரம்பமாகி எத்தனை ஸம்வத்ஸரமாகியிருக்கு மென்று வினவினால் ஆர்ஜவத்துடன் விடை கூறவல்லார் எவ்விதமாக விடை கூறுவரென்றால் நிகழும் நூற்றாண்டில்தா னென்பர்: சென்ற நூற்றாண்டிலேயே ஆரம்பமாயிற்று என்றும் சொல்லுவர். உடனே எதற்காக இந்த விச்வாமித்ர ஸ்ருஷ்டிகள்? என்று வினவினால்

த்ருப்திகரமான விடை வருமா? என்று பார்க்கவேணும். அறுநூறாண்டுகட்கு முன்பு அவதரித்திருந்த ஆசிரியர்க்கு அந்நாள் தொடங்கி ஒருவிதமான வழிபாடு நடந்துவாரா நிற்க, பிற்பட்ட காலத்தில் (அதாவது மிகவும் ஸந்நிஹிதமான காலத்தில்) திடீரென்று ஒரு கோலாஹலத்தைக் கிளப்பி அஸ்தாநே மாச்சரியத்தை வளரச் செய்யும் செயல்களை நடத்திக்கொண்டு போருவதானது எம்பெருமானுடைய லீலைகளிலே இதுவுமொன்று என்று நினைப்பதற்குறுப்பா மத்தனையொழிய வேறு பேசத்தானுவதுண்டோ?

33. காஞ்சீபுரியில் திருக்கச்சி நம்பிகள் ஸன்னிதியுள்ளது. அதைப் பரிபாலிக்கும் பொறுப்பை பஸ்மதாரிகளான சைவர்கள் பரம்பரையாக ஏற்று வருகிறார்கள். அவர்கள் திருக்கச்சி நம்பிகளின் ஸம்பிரதாயம் வேறாயிருக்கின்ற தென்பதை யுணராதவர்களல்லர். அந்த ஸம்பிரதாயத்தை மாற்றித் தங்களைப்போல் அவரையும் (அர்ச்சையில்) பஸ்ம தாரியாக ஆக்கிவிட வேணுமென்று நினைப்பதாகவோ அதற்குரிய சேஷ்டைகள் செய்வ தாகவோ இதுவரையில் தெரியவில்லை. காஞ்சியில் மட்டுமன்று; மற்றும் அனேக ஸ்தலங்களிலும் திருக்கச்சி நம்பிகள் பக்கலிலே பரிவு காட்டுபவர்களும் அவர்க்குத் தொண்டு செய்பவர்களும் சைவர்களாகத்தான் காணப்படுகிறார்கள். அவர்கள் நம்பியின் சின்னங்களை மாறுபடுத்த முயலுவதில்லை. தங்களுடைய சின்னங்களையிட்டு அவரைத் தனியே பிரதிஷ்டை செய்து தாங்கள் தனியாக ஆராதிக்கவும் ஆசைப்படுவதில்லை. ஸகலவித யோக்யதா ஸம்பந்நரான தேசிகனிடத்தில் ஜந்மாந்தர ஸஹஸ்ர நற்றவப் பயனாகப் பிற வகுப்பினர்க்கு பக்தி விளைந்தது உஜ்ஜீவந ஹேதுவேயென்பதில் ஐயமில்லை. அவ்வாசார்ய ஸார்வபௌமனுடைய வழிபாடுகள் தொன்றுதொட்டு எந்த விதமாக நிகழ்ந்து வருகின்றதென்பதைப் பிராமாணிகர்கள் அபலாபம் செய்ய முடியுமா?

34. முதன் முதலாகத் திருவரங்கம் பெரிய கோயிலில் தேசிக விக்ரஹத்தில் திருமண் விபர்யயம் செய்ய வேணுமென்று ஒரு வகுப்பினர்க்குத் தோன்றிற்று. அப்படியே செய்தார்கள். செய்த க்ஷணத்திலேயே ஹாஹாகாரம் ஏற்பட்டது. அந்த விஷமச் செயல் அநீதிதானென்று முடிவு செய்த அரசாங்கப் பிரபுக்கள் அதற்காக ஆயிரம் ரூபாயபராதம் விதித்தார்கள். அது மூன்று நீதி மன்றங்களிலும் ஊர்ஜிதமாயிற்று. உலகத்தில் எத்தனையோ விஷமச் செயல்களுக்கு எத்தனையோ விதமான சிக்ஷைகள் ஏற்படுவதுண்டு. ஆயிரம் ரூபாய பராதம் விதிக்கப்பட்டதாகக் காணும் ஸம்பவம் இஃதொன்றுதான். இதனால் தேசிகனுடைய சின்னத்தை மாற்ற முயல்வது மிகப்பெரிய தவறு என்பது கையிலங்கு நெல்லிக்கனியாக விளங்கவில்லையா? திருவவதார ஸ்தலத்து ப்ரக்ரியைகளும் ப்ரஸித்தமானவையே. பெரியதொரு வகுப்பில் விவேகி ச்ரேஷ்டர்கள் இல்லையென்று சொல்ல முடியுமா? நெஞ்சாலாவது நினைக்க முடியுமா? ஆனால் அவர்களின் விவேகம் பயன்படவில்லை.

35. ஆக இவ்வளவால்—"எம்பெருமானார் தர்சனத்தில் தேசிக ஸம்ப்ரதாயம் தென்னாசார்ய ஸம்பிரதாயம் என்று இரண்டு ஸம்ப்ரதாயங்கள் இருந்து வருகின்றன" என்றெழுதியுள்ளது அஸம்பத்தம் என்று முடிந்தது. அடுத்தபடியாக "தேசிகனருளிச் செய்த ஸம்ப்ரதாய ரஹஸ்ய க்ரந்தங்களைப் பின்பற்றி நடப்பவர்கள்—தேசிக ஸம்ப்ரதாய ஸ்தர்கள், வடகலையார்கள்" என்றெழுதியுள்ளதைப்பற்றிச் சில கேள்விகள் கேட்கிறேன்;

இவற்றில் ஒன்றுக்காவது நேர்மையான விடை கூறிவிட்டால் இக்கட்டுரை யெழுதியவர் இன்னாரென்று தெரிந்து கொண்டு இவர்க்கு அத்தாணிச்சேவகம் செய்வேன். சில கேள்விகள் கேட்கிறேனென்றெழுதினேன்; சில கேள்விகளென்ன? நூற்றுக்கணக்கான கேள்விகளும் கேட்பேன்; ஆனாலும் விரிவுக்கு அஞ்சி எளிய கேள்விகள் பன்னிரண்டு மட்டும் கேட்கிறேன். யார் விடை கூறினாலும் அவருடைய பாதங்கள் யாமுடைய பற்று. இக்கேள்விகளுக்கு வெளிவரப்போகிற விடையை இப்போதே நாம் இங்கு எழுதி வைக்கிறோம் காண்மின்—"இக்கேள்விகள் ஏற்கெனவே வெளிவந்தவைதானே, அபூர்வ மன்றே" என்று—இதைத் தவிர வேறு பேச்சு வாராதென்பது திண்ணம். *எப்பொழுதும் நாள் திங்களாண்டூழியூழிதொறும் அப்பொழுதைக்கப்பொழுதென்னாராவமுதமே* என்னும்படியான கேள்விகளே இவை;—

36. (1) ரஹஸ்ய ரத்நாவலி தேசிகனருளிய ரஹஸ்யந்தானே; இதில் "ஸ்ரீமானான நாராயணன் ஒருவனுமே ஸர்வஜீவர்களுக்கும் தஞ்சம்; ஸர்வ ஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான பெரிய பிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க்கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிறாள்" என்றிருப்பது உமக்குக் காலகூடந்தானே. இதைப் பின்பற்றுகிறோமென்று வாய்திறக்க வழியுண்டா?

37. (2) மேலே குறித்த வாக்யராசியில் "பிராட்டி ஜீவர்களுக்குத் தஞ்சமாகிறாள்" என்றதை அடுத்த ரஹஸ்ய ரத்நாவலீஹ்ருதயத்தில் விவரித்தருளாநின்ற ஸ்வாமி "ரக்ஷா ஹேதுவாகிறாள்" என்றருளியிருப்பதைக் கண்டிருக்கிறீரா? எம்பெருமான் செய்யும் ரக்ஷணத்திற்கு இவள் ஹேதுவாகிறாள் என்று தானே இதற்குப் பொருள். எம்பெருமானைப்பற்றிச் சொல்லுமிடங்களில் "இவன் ரக்ஷாஹேதுவாகிறான்" என்று எங்கேனும் யாரேனும் சொல்லியிருப்பதுண்டோ? ஆகாசத்தைப் பாராமலும் காடு பாய்ந்து பேசாமலும் ச்ருங்கக்ராஹிகயா விடை கூறுவீரா?

38. (3) சதுச்ச்லோகியில் *ச்ரேயோ நஹ்யரவிந்தலோசநமந:காந்தாப்ரஸாதாத்ருதே ஸம்ஸ்ருத்யக்ஷர வைஷ்ணவாத்வஸு ந்ருணாம் ஸம்பாவ்யதே கர்ஹிசித்* என்று ஆளவந்தார் அருளிச்செய்திருப்பதில் "பிராட்டியின் அநுக்ரஹமில்லாவிடில் மோக்ஷ மார்க்கத்தில் நன்மை கிடைக்காது" என்றிருப்பதில் ஸ்வாமி ஆக்ஷேபத்தைக் கிளப்பினதுண்டோ; மோக்ஷ ப்ராபகமான லக்ஷ்மீகடாக்ஷம் எப்படிப்பட்டது என்று விபுல விசாரம் செய்து முடிவாக "மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷூணாம் கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வஸம்மதம்;" என்றருளிச் செய்திருப்பதைக் கண்டிருக்கிறீரா? 'மோக்ஷமளிப்பவன் எம்பெருமான், பிராட்டி புருஷகாரமாக மட்டும் நிற்கிறாள்' என்பதுதானே இதற்கு நிஸ்ஸந்தேஹமான பொருள். இதையடியொற்றியதா உம்முடைய ஸம்பிரதாயம்?

39. (4) அதே கட்டத்தில் "பரிபூர்ணாநுபவ ப்ரதாநஸங்கல்பஸ் து பகவத: ஸ்வஸ்யைவ வா? ஸபத்நீகஸ்யவா? இதி யதாப்ரமாணம் பவது" என்று ஸ்வாமி ஸாதித்திருக்கும் ஸூக்தியை ஸேவித்திருக்கிறீரா? பரிபூர்ணாநுபவ ப்ரதாநமாவது மோக்ஷமளிக்கை; அதற்குரிய ஸங்கல்பம் ப்ரஹ்மசாரி நாராயணனுக்கா? க்ருஹமேதி நாராயணனுக்கா? என்று விகல்பித்து, இது பிரமாணப்படியாகட்டும் என்று

விட்டிட்டார். ப்ரமாண ஸாகரபாரங்கதரான ஸ்வாமி ப்ரமாண பரிசீலன பூர்வகமாகவும் ஆசார்யோபதேசாநுஸாரமாகவும் ஸித்தாந்தப்பொருளைத் தாம் விவரியாதே 'யதாப்ரமாணம் பவது' என்றது ஏன்? கிடாம்பியப்புள்ளார் கிளிப்பிள்ளையைப் பழகுவிக்குமா போலே தம்மைப் பழக்கியிருக்க, இப்படி ஸதாசார்யோபதேசம் என்னுதே 'யதாப்ரமாணம் பவது' என்னலாமோ? அது கிடக்க; "மோக்ஷப்ரதாநஸங்கல்ப: ஸ்வஸ்யைவ வா? பத்ந்யா அபி வா? என்று விகல்பசரீர விந்யாஸத்தைக்கூட ஸஹியாதவர் தேசிகன்—என்பதைத் தெரிந்துகொண்டிருக்கிறீரா?

40. (5) ந்யாய ஸித்தாஞ்ஜனத்தில் *இயம் கேவலலக்ஷ்மீ சோபாயத்வ ப்ரத்யயாத்மிகா, ஸ்வஹேதுத்வதியம் ருந்தே கிம் புநஸ் ஸஹகாரிணும்* என்கிற காரிகை எளிதாகப் பொருள் படுகிறதன்றோ உமக்கு. இது ப்ரபத்தியின் உபாயத்வத்தைமட்டும் நிரஸிப்பதன்று, பிராட்டியின் உபாயத்வத்தைத்தான் முந்துறமுன்னம் நிரஸிப்பது என்று தெரிந்துகொண்டிருக்கிறீரா? பிராட்டிக்கும் உபாயத்வமுண்டென்று திருவுள்ளத்திலே தோற்றியிருந்தால் "லக்ஷ்மீததீசோபாயத்வ ப்ரத்யயாத்மிகா" என்று வசனவ்யக்தி வெளிவந்திருக்குமென்பதை நெஞ்சில் திடமாகக்கொண்டிருக்கிறீரா? ஆக இந்த காரிகையினுல் தேசிக ஸம்ப்ரதாய பஹிர்ப்பூதர் நாம் என்று திண்ணமாக எண்ணியிருக்கிறீரா?

41. (6) மேலே உபபாதித்தபடி பணித்த ஸ்வாமி தாமே ரஹஸ்யத்ரயஸாரஸித்தோபாய சோதனுதிகாரத்தில் "இப்படி மத்யஸ்தத்ருஷ்டியாலே ப்ராமாணிகார்த்தங்கள் தோற்றச் செய்தே பற்றினது விடாதொழியில் *த்ருட பூர்வச்ருதோ மூர்க்க:—...... மந்தபுத்தீநாம் துராத்மநாம் குதர்க்க வ்யாலதஷ்டாநாம் விப்ராந்தேந்த்ரியவாஜிநாம்* என்கிற தசையாம்" என்கிற பரமபாவந பரமபோக்ய திவ்ய ஸ்ரீஸூக்தி மாலிகைகளையும் ஸமர்ப்பித்தருளியுள்ளாரென்பதைக் குறிக்கொண்டிருக்கிறீரா? மத்யஸ்த த்ருஷ்டியாலே ப்ராமாணிகமாகத் தோற்றினதாகத் தாம் அபிமானிக்கும் அர்த்தங்கள் எவை? என்று தெரிந்துகொண்டிருக்கிறீரா? *த்ருட பூர்வச்ருதோ மூர்க்க இத்யாதி ஸத்கார யோக்யர்களாகத் தாம் கொண்ட க்ருஹீத க்ராஹிகள் பெரியோர்களைப் பணிந்து கேளாமல் மூர்க்கத்தனமாகச் சொல்லிவரும் அர்த்தங்கள் எவை? என்பதை உந்தம் ஆசார்ய ஸகாசத்திலே கேட்டிருக்கிறீரா?

42. (7) *த்ருட பூர்வச்ருதேத்யாதி ஸத்காரத்திற்கு முன்னே வரையப்பட்ட பங்க்திகள் [அடுக்கப்பட்ட ப்ரமாண ராசிகள்]

> "தபஸ்ஸ்வாத்யாய நிரதமென்று வால்மீகி சொன்னுர்: *மந்த: கவியச: ப்ரார்த்தீ* என்று காலிதாஸனும் சொல்லிவைத்தான். *நிஷ்ப்ரத்யூஹ முபாஸ்மஹே* என்று வேதாந்தபரிசயமுள்ள பட்டமுராரியும் பணித்தான். *ஸ ச ஸமாகர்ண்ய ஸகலாம் ப்ரவ்ருத்திம்* என்றும், *தாடகா நாம ராக்ஷஸீ ருரோத* என்றும் ஸ்ரீராமாயண ஸங்கரஹத்திலும் அறுதியிட்டுவைத்தார்கள். 'ராமஸ்ய ராமயோ:' என்று சப்த மஞ்ஜரியில் சொன்னதுபோலவே 'ராஜ்ஞ: புருஷ:—ராஜ புருஷ:' என்று ஸமாஸ ருஸூமாவலியிலும் சொல்லிற்று. 'ராமேண ராவணே நிஹத:' என்றும், ராம: ராவணம் ஜகாந என்றும் பாஷா மஞ்ஜரியிலும் பாஷிதமாயிற்று"

என்பவற்றேடு ஸமசீலமென்று தெரிந்து கொண்டிருக்கிறீரா?

43. (8) ஆளவந்தாரருளிய கீதார்த்த ஸங்க்ரஹத்தில் *நிஜகர்மாதி பக்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித:, உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத் தேவே து தாம் அபீ:* என்னும் சுலோகத்தின் ரக்ஷையில்

"முக்தவ்யாபாரந்யாயேந ஸ்வயம் ஸ்வாதுத்வாத் க்ஷணிகஸ்ய காலாந்தரபாவி பல ஸாதநத்வ அநுபபத்தி தர்சநாச்ச நாஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷோபாயதா புத்திரபி ஸ்யாதிதி பாவ:; அத: தைஸ்தைராராதிதோ பகவாநேவ ஸர்வத்ரோபாய:"

இத்யாதிஸூக்திகளால் சேதநக்ரியாகலாபத்தில் ஸாதநத்வப்ரதீதி வ்யவஹாரங்களை அணுமாத்ரமும் ஸஹியாதே பரசுப்ரஹாரேண கண்டித்தொழித்தவர் தேசிகனேயென்று தெரிந்துகொண்டிருக்கிறீரா? இங்கு "முக்த வ்யாபாரந்யாயேந" என்று காட்டியருளி யிருப்பதை விசேஷித்துக் குறிக்கொண்டிருக்கிறீரா? பலாநுபவத்தில் மட்டு மூன்றின முக்தனிடம் ஸாதநாநுஷ்டான ரூபமான செயலுக்கு ப்ரஸக்தியில்லையென்றும், ஆறுலும் முக்தன் வாளாவிருக்ககில்லாமல் செய்வனவெல்லாம் ஸ்வயம் போக்யமாகக்கொண்டு செய்கிறானென்றும், முமுக்ஷுவின் வியாபாரங்களும் அத்தகையனவேயென்றுமுள்ள தென்னாசார்ய ஸித்தாந்தத்தையே தேசிகன் கல்வெட்டாக்கியருளியிருக்கின்றாரென்பதை நன்கு தெரிந்து கொண்டீரா? விடை கூறியேயாகவேண்டும்.

44. (9) பிள்ளைலோகாசாரியர் "ஸ்வீகாரந்தானும் அவனாலே வந்தது; ஸ்ருஷ்ட்யவதாராதிமுகத்தாலே பண்ணின க்ருஷிபலம்" என்றருளிச்செய்த ஸ்ரீஸூக்தியை நிதியாகக்கொண்ட ஸ்வாமி தேசிகன் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் "உபாயஸ் ஸ்வப்ராப்தே: உபநிஷததிதஸ் ஸ பகவாந்......நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண:" என்று அவ்வர்த்தத்தை சிலா சாஸனம் செய்துவைத்தருளினர் என்பதை உள்ளத்தில் கொண்டிருக்கிறீரா? *நிதாநம் த்வாதிகாரணம்* என்கிற அமர கோசத்தையறிவீரா? இங்கே *அகில நிர்மாண நிபுண:* என்கிற விசேஷணம் அஜாகளஸ்தனமென்று நினைத்திருக்கிறீர்? *ஸ்வப்ராப்தேஸ் ஸ்வயமேவ ஸாதநதயா ஜோகுஷ்யமாண: ச்ருதௌ* என்கிற தேசிகஸூக்திக்கு அர்த்தமில்லையென்று நினைத்திருக்கிறீர்?

45. (10) எம்பெருமானை அடிபணிகின்றவர்களாகச் சொல்லப்படுமவர்கள் உண்மையில் தாமாக அடிபணிகின்றார்களல்லர்; புழுகுறித்தது எழுத்தாமாப்போலே யத்தனை—என்கிற நம்பிள்ளைஸூக்தியைப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானங்களில் கண்ட ஸ்வாமி தேசிகன் அதை *குணக்ஷதலிபிக்ரமாத் உபநிபாதிந: பாதி ந:* என்று ச்லோகபத்தமாக்கினரென்று கேட்டிருக்கிறீரா? இந்த ச்லோகம் எங்கிருக்கிறதென்றாவது தெரிந்துகொண்டிருக்கிறீரா? குணக்ஷதலிபிக்ரமமாவது என்ன? என்று கேட்டால் சொல்லுவீரா? (குணக்ஷத) என்ற விடத்தில் முதலெழுத்து கவர்க்க த்ருதீயமென்று, சதுர்த்தம்; புழு என்று பொருள்; குணக்ஷதலிபிக்ரமமென்றவிது பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்திக்கு அருமையான மொழி பெயர்ப்பு என்பதையுணர்ந்து உகப்பீரா? க்ரம மென்றது நியாயமென்றபடி. குணக்ஷதலிபிந்யாயேந உபநிபாதிந:—அடிபணிகின்றவர் களான, ந:—நம்மை, பாதி—எம்பெருமான் காத்தருள்கிறானென்றதாயிற்று. 'இது நமக்கு அபூர்வார்த்த லாபம்' என்று ஆனந்தக் கண்ணீர் சொரிய நிற்பீரா?

46. (11) திருவாய்மொழி வியாக்கியானங்களில் தலையான (பிள்ளானுடைய) ஆறாயிரப்படியை ஸ்வாமி தேசிகன் கண்ணெடுத்தும் பாராமல் பெரியவாச்சான்பிள்ளையின் இருபத்து நாலாயிரப்படியையே ஸாகல்யேந உபஜீவித்திருக்கிறாரென்பதைப் பலகால் விரிவுக்கஞ்சாமல் விளக்கியிருக்கிறேனே; அதையெல்லாம் மனப்பாடம் செய்திருக்கிறீரா? அவற்றுக்கெல்லாம் சிகரமானவிடம் காட்டியிருக்கிறேனே! நினைவிருக்கிறதா? (அதாவது) திருவாய்மொழியில் (4—5—6) *கரியமேனிமிசை வெளியநீறு சிறிதேயிடும் பெரிய கோலத்தடங்கண்ணன்* என்ற விடத்திற்குப் பிறர்செய்த ஆக்ஷேபத்தைப் பரிஹரிக்க வேண்டி ஆறாயிரப்படியில் ஒரு விதமாகவுள்ள பொருளை யுபேக்ஷித்துப் பெரியவாச்சான் பிள்ளையருளிய பொருளையே எடுத்துக் காட்டினதுமல்லாமல் "இப்படி **ஆசார்யர்** அருளிச் செய்வது" என்று ஸச்சரித்ரரக்ஷையில் பணித்திருக்கிறார். இதைக் கண்டு வைத்தும் 'தென்னாசார்ய ஸம்பிரதாயம் வேறு, தேசிக ஸம்பிரதாயம் வேறு' என்றெழுத உமக்கு எப்படி ஐயா! கைவந்தது?

47. (12) ஸ்தோத்ர பாஷ்யம் முழுவதும் பெரும்பாலும் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானமயம்; கீதாபாஷ்ய தாத்பர்ய சந்திரிகையும் அப்படியே; இப்படி நாமெழுதுவது ப்ரதிஜ்ஞாமாத்ரமன்று. விஷயங்களை அலகலகாக எடுத்து அலசியலசிக் காட்டியிருக்கிறேன். பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்திகளில் தேசிகனுக்கு மஹத்தான கௌரவம். அக்காலத்தில் தேசிகனை நோக்கிச் சிலர் "தேவரீர் திவ்யப் பிரபந்தங்களுக்கு வியாக்கியானமெழுதவேணும்" என்று பிரார்த்திக்க, அதற்கு அவர் ஸாதித்த மறு மொழியை உங்களிலொருவர் எழுதி வெளியிட்டிருக்கிறாரே, அதைப் பார்த்திருக்கிறீரா? ஸ்ரீராமாநுஜன் 214ல் அதை விளக்கியிருக்கிறேன். மறந்திருந்தாலும் எடுத்துப்பார்த்து உள்ளம் தெளிவீரா? ***ராத்ரிரேவ வ்யரம்ஸீத்*** என்றாற்போலே வினாக்களின் (12 லக்கம்) முடிந்ததேயொழிய முக்கியமாகக் கேட்க வேண்டிய விஷயங்களில் ஏக தேசமும் முடியவில்லையே. இருக்கட்டும். இவற்றுக்கு விடை வெளிவந்தால் போதும்.

48. "ஸ்ரீதேசிகனுடைய ஸம்பிரதாய க்ரந்தங்களைப் பின்பற்றி நடப்பவர்கள் வடகலையார்கள்" என்று (பக்கம் 39ல்) மனச்சாட்சிக்கு மாறாக எழுதியிருந்தபடியால் இவ்வளவு விசதமாக நாம் எழுத நேர்ந்தது. இவர் உள்ளபடியெழுதவேண்டுமானால் இப்படியெழுதவேண்டும். எப்படியென்றால், ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயஸ்தர்களாய் உபயவேதாந்த ப்ரவர்த்தகபிருது பெற்றவர்களான ஆசார்யர்கள் அனைவரும் தென்னாசாரியர்களே; இவ்வாசார்ய ச்ரேணியில் தலைமை பெற்றவர் ஸ்ரீமந்நிகமாந்த மஹாகுரு. பிற்காலத்தில் ஏதோ காரணார்த்தமாக நாங்கள் அவரைப் பற்றிக் கொண்டோம்; அவருடைய ஸ்ரீஸூக்திகளை ஏதோ மேலெழப் பார்த்து மயங்கி விட்டோம. இப்போது க்ரமேண விஷயங்களையறிந்து வருகிறோம். இனிமேல் எதை விடுவது? எதைப் பற்றுவது? க்ருஹீதக்ராஹிகளாகவேயிருக்கக் கடமைப்பட்டிருக் கிறோம்—என்றெழுதுவது யுக்தமாகும், யோக்யமாகும். இனி மேலே செல்லுகிறேன்.

49. இக்கட்டுரையாளர் மேலும் எழுதுகிறார்—"தேசிகன் வணிகன், ஆச்சான்"— என்று சூடாமணி நிகண்டு இருக்கிறதாம்; அதன்படி தேசிகனென்பதற்கு வியாபாரி யென்கிற பொருளைக் கொள்கிறாராம். ஸ்வாமி தேசிகன் வியாபாரியைப்போல் உயர்ந்த

சரக்குகளை......என்று ஏதோ எழுதிப்போகிறார் தலைவேதனையாக. அடைக்கலப்பத்துக்கு வியாக்கியானமெழுதினவொருவர் (இளைத்துவிழுங் காகம்போல்) என்றவிடத்திற்கு "தேசிகனுக்கு ப்ரபத்த்யுபதேசம் பண்ணின ஆசாரியர் காகமே போலும்" என்றெழுதி வைத்தார். அவர் இவர்க்கு ஆசாரியர் போலும்.

## அருள்கொண்டாடுமடியவர் கட்டுரை விமர்சம்

50. அடுத்த கட்டுரை "அருள் கொண்டாடு மடியவர்" என்பது. இக்கட்டுரை பலகால் நமது கண்ணில் பட்டிருக்கின்றது பல பத்ரிகைகளில். கண்ணிநுண் சிறுத்தாம்பில் முதற்பாட்டிலேயே ஸ்வாமி பெருமை அற்புதமாக விளங்காநிற்க அதை விட்டு வேறொரு பாட்டைத் தேடியோட வேணுமோ? விபவாவதாரப் பெருமையை ஸூசிப்பிப்பதைவிட அர்ச்சாவதாரப் பெருமையைக் காட்டுவது [விளங்கக் காட்டுவது] மேலல்லவா? அற்புதமான ஆழ்பொருள் கேளீர். [கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப் பண்ணிய பெருமாயன்] அர்ச்சாவதாரங்களில் வெளிப்புறப்பாட்டுக்காக விக்ரஹத்தைத் தோளுக்கினியானில் வைத்துத் தாம்பினால் கட்டுவர்களன்றோ, கோயிலில் தாயார் ஸன்னிதிக்கெதிரே விளங்கும் விக்ரஹத்திற்கு ஒரு புரட்டாசித் திருவோணத்தன்று ஹத்துமீறி ஸரபஸமாய் வெளிப்புறப்பாடு செய்துவிடுவதென்று துணிந்து செய்தபடியைச் சொல்லிற்றாயிற்று. அதன் பிறகு என்னாயிற்று? கோயிலதிகாரிகளும் நீதி மன்றத்தாரும் செய்தியறிந்து விரைந்தோடி வந்து "என்னப்ப! நில்" என்றார்கள் என்பது பிரசித்தம். என்னப்ப! எங்குப் புறப்படுகிறாய்? போதும் போதும், நில்—என்றதை தேறிய மாஞானத்துடன் வெகுகாலம் முன்னமே தெரிந்துகொண்டு மதுரகவிகள் பேசிவைத்தாராயிற்று. முதல் திருவந்தாதியில் (4.) *நெறிவாசல் தானேயாய்......வாசல் போர்க்க தவம்சாற்றி* என்ற பாசுரத்தையும் இங்கே இணக்கியநுஸந்திப்பது.

51 இக்கட்டுரைகாரர் எழுதுகிறார் —"திருமால் திருவருளுக்குக் கவிபாடியவர் தேசிகனொருவரே; தயைக்கென்று தனித்து நூலிட்டவர் தேசிகனுக்கு முன்னும் கிடையாது, பின்னும் கிடையாது' என்று. ஆரியர்காள்! நன்னூலில் "தன்னுடையாற்றலுணரா ரிடையினும் தன்னைப் புகழ்தலும் தகும்" என்று கூறியுள்ளதற்கேற்ப உண்மையான விஷயத்தை உலகுக்கு நினைவூட்டுகிறேனிங்கு. தானேயெழுதிய தன் சரிதையென்னும் என் சரிதை உலகம் பரவியுள்ளது. அது 1957-ல் வெளியிட்டது. பதினொரு வருஷங்களாயின. நான்கு பகுதிகளானவதில் (பக்கம் 288-ல் சரிதையை ஒருவாறு எழுதி முடித்த பின்பு "இனிமேல் அடியேனுடைய நூல்களையெல்லாம் வரிசையாக வெளியிடுகிறேன்" என மகுடமிட்டு, அந்நாள் வரையில் எழுதி வெளியிட்டிருந்த ஸம்ஸ்க்ருத நூல்கள் 155-க்கு முன்னம் ஜாபிதா கொடுத்துவருகையில் "117. அபிநவதயா சதகம்" என்றெழுதி, இவற்றுக்கெல்லாம் மேலே விவரணமெழுதுகையில் (பக்கம் 322-ல்)

" 117. **அபிநவதயாசதகம்.** எம்பெருமானுடைய தயையென்னும் குணத்தை நவீனர்களின் வாதங்களை நிச்சேஷமாக நிரஸித்து நிஷ்கர்ஷிக்கும் பத்யப்ரபந்தமிது. இது இரண்டு சதகமாக அமைந்துள்ளது. மொத்தம் 230 சுலோகங்கள் கொண்டது. ஒரு ஆசார்யருக்கும் மற்றொரு ஜிஜ்ஞாஸுவுக்கும் ஸம்வாதரூபமாக அமைக்கப்பட்டது. இதில் வாதியாய் நின்றவர் D. T. தாதாசார்யர். இந்த நூல் தேவநாகரியிலும் தெலுங்குலிபியிலும் வெளிவந்தபின்பு தூஷகர் சாந்தராயினர்."

என்று விவரிக்கப்பட்டுள்ளது. தேசிகனுடைய தயாசதகத்திற்காட்டிலும் வாசிதோற்ற அபிநவதயாசதகமென்று பேரிடப்பட்டது. இதை ஸம்ஸ்க்ருத வியாக்கியானத்தோடுங் கூட தேவநாகரலிபியில் (ஸூ 1952-ல்) அச்சிட்டு வைதிக மநோஹரா மூலமாக வெளியிட்டிருக்கிறேன். வ்ருத்தரத்நாகரத்தில் எத்தனைவகை வ்ருத்தங்களுண்டோ, அத்தனையும் இதில் பெரும்பாலும் இடம் பெற்றுள்ளன. ஒரு சதகமே யெழுத ஸங்கல்ப மிருந்தது. விவக்ஷித விஷயங்கள் அதில் முடிவு பெருமையாலே

**சதகம் து ஸமாப்திமகாத் அதுநா விஷயஸ் த்வவசிஷ்யத ஏவ பஹு**
**அத ஏவ புநச் சதகம் விதுஷாம் அதிபோக்யமுதேதி நிசாமயத.**

என்றிட்டு த்விதீயசதகம் தொடங்கி நூற்றுமுப்பது சுலோகங்களில் தலைக்கட்டினேன். ஆக மொத்தம் சுலோகங்கள் 230. இதன் பிரதிகள் நிறைய இருப்பதனால் (ஒரு ரூபா ஸ்டாம்பு அனுப்பிப்) பெறலாம். அடியேனுக்குப் பரமாப்தராய் சென்னை சைதையில் எழுந்தருளியிருக்கும் உவே. வித்வான். ஸ்ரீராமாயணபூஷணம். கோமல். சேஷாத்ரியாசார்ய ஸ்வாமியிடத்தில் சில பிரதிகள் சேர்ப்பிப்பேன். விருப்பமுள்ளவர்கள் வாங்கிப் பார்க்கலாம். Advocate R. V. சேஷாத்ரியாசாரியர் (Egmore) இடமும் காண்க.

52. ஸ்வாமியின் தயாசதகத்தை ஆழ்ந்து பார்த்தவர்களில்லை. தயாளுவான எம்பெருமானுடைய பெருமையையே தயையின் மீது ஏறிட்டுத் துதிப்பது இத்துதிநூல். ஸ்ரீராமபராக்ரமத்தைப் பேசநினைப்பவர்கள் "ராமசாபஸ்தவ:" "ராமபாணஸ்தவ:" "ராமபாத ரேணுஸ்தவ:" என்றிங்ஙனே பெயரிட்டு நூல்களியற்றியிருப்பதுபோல. ப்ரஸித்தமான ஸுதர்சன சதகத்திலும் ஜ்வாலாவர்ணனம் நேமிவர்ணனம் அரவர்ணனம் நாபிவர்ணனம் அக்ஷவர்ணனம் என்றிட்டிருப்பதும் காணலாம். தயையாவது என்ன? என்பதில் சிலர்க்கு அயதாஜ்ஞானமுள்ளது. அதைத் தொலைக்கவே ஸ்வாமி தயா சதகத்தைப் பணித்தருளினர். அதில் தெளிவற்றவர்களுக்குத் தெளிவைப் பிறப்பிக்கவே நாம் இரண்டு சதகங்களிட்டது. ஸ்வாமியின் தயாசதகத்தில் "அசிதவிசிஷ்டாந் ப்ரலயே ஜந்தூநவலோக்ய ஜாதநிர்வேதா, கரணகலேபரயோகம் விதரஸி வ்ருஷசைலநாத கருணே! த்வம்." என்கிற ச்லோகம் ரத்னமானது. இதைப்பற்றிச் சிறிது விவரணம் கேளீர்.

53. *ஏவம் ஸம்ஸ்ருதி சக்ரஸ்தே ப்ராம்யமாணே ஸ்வகர்மபி:, ஜீவே துஃக்காகுலே விஷ்ணோ: க்ருபா காபி உபஜாயதே* என்ற பகவச்சாஸ்த்ர வசனத்தையடியொற்றி பட்டர் *அசிதவிசேஷிதாந் ப்ரலயஸீமநி ஸம்ஸரத: கரணகலேபரைர் கடயிதும் தயமாநமநா:* என்றருளிச்செய்தார். இவற்றில் க்ருபாசப்தமும் (தயமாநசப்த ப்ரக்ருதியான) தயாசப்தமும் சேர்ந்திருந்தாலும் அந்த குணத்தின் ஸ்வரூபம் விளங்க வில்லை. பட்டர் மேலே "தயாந்யேஷாம் துஃக்காப்ரஸஹநம்" என்றருளிச் செய்ததை ஸ்வாமி தேசிகன் குறிக்கொண்டு "ஜந்தூநவலோக்ய ஜாதநிர்வேதா" என்றருளிச் செய்தாராயிற்று. தயைக்கு நிர்வேதமுண்டாயிற்றென்றால் என்ன அர்த்தம். தயாளுவின் நிர்வேதத்தையன்றோ காட்டினபடி. இவ்வண்ணமாக ஸ்வாமி ஆலங்காரிகப்ரக்ரியையிலே அருளிச்செய்துள்ளவற்றின் சுவையை யுணர மாட்டாதார் வம்பு தும்பு விஷயங்களை விவரித்து ஏடுகளை நிரப்புவதனால் என்னாகும்? கீர்த்திமூர்த்தியான திருச்சி ஏ. வி. கோபாலாசாரியர் ஸ்வாமி *கச்சித் காந்தாவிரஹ குருணா* என்கிற மேக ஸந்தேச முதல்

சுலோகத்தில் திருவாய்மொழியாயிரமும் அடங்கியிருப்பதாக விவரித்துள்ளாரே, அதை யொக்கும் இக்கட்டுரைகாரரின் பரப்படங்கலும். ... ... ✽

## கலியனும் தேசிகனும் என்ற கட்டுரையின் ஆராய்ச்சி.

54. மலரில் (பக்கம் 81ல்) கலியனும் தேசிகனும் என்ற கட்டுரை காண்கிறது. புளுகு என்றொரு தேவதையுண்டு, அது எங்கெங்கே தாண்டவமாடுகிறதென்பதைப் பற்றிப் பலர் பல சுலோகங்கள் பணித்துள்ளார்கள். அவற்றுள் *ஆதௌ ஜ்யௌ திஷிகாந் நிஷேவ்ய, வணிஜ: பச்சாத்* என்கிற சுலோகமுமொன்று. அதில் "ஸூப்தி: கவீநாம் க்ருஹே" என்பது முடிவு. கவிகளின் வாக்குக்களில் ஸ்வபாவோக்தியலங்காரம் ம்ருக்யமாய் அதிசயோக்தியும் மித்த்யாத்யவஸிதியுமே மலிந்திருக்குமென்று மல்லி நாதாதிகள் எழுதியுள்ளார்கள். அதற்கு ப்ரதாநலக்ஷ்யம் இக்கட்டுரையேயாகும். உலகில் ஸ்வைரிணிகளென்று சில மாதர்களை ஒதுக்கிவைத்திருப்பர்கள். அவர்களைப் பங்க்தியிலே புகுரவிடச் சிலர் ஆசைகொண்டு நெய்பரிமாறவும் தயிர்மோர் எடுக்கவும் பாத்திரங்கள் சுத்தி செய்யவும் கட்டளையிட்டு உள்ளே நுழையச் செய்வதுண்டு; ப்ராமாணிகர்கள் அதனையும் பொறுதே விலக்கித் தொலைப்பர்கள். மானுவமான ஹீனர்கள் தங்கள் ஆசையை நெகிழவிட முடியாமல் தொடர்ந்து செல்லவிட்டு அம்மாதர்களையும் பரிபவப்படுத்தித் தாங்களும் பரிபவப்பட்டு நிற்பர்கள். இது பலர்க்கு அநுபவ ஸாக்ஷிகம்.

55. இதனை வரிதோறும் நினைப்பூட்டும் கட்டுரைகளில் தலையானது இக்கட்டுரை. பல்லாவரமென்னு மூரிலுள்ளவர்கள் "பெரியாழ்வார் இவ்வூரி லிருந்துகொண்டுதான் பிரபந்தம் பாடத் தொடங்கினர்; ஆனது பற்றியே "பல்லா" என்றே பாசுரமாரம்பித்தார். என்பர்கள். காவனூரிலுள்ளவர்கள் "தொண்டரடிப்பொடியாழ்வார் இவ்வூரிலிருந்து கொண்டுதான் திருமாலை பணிக்கத் தொடங்கினர்; ஆனதுபற்றியே (காவ) என்றாரம் பித்தார் என்பர்கள். வையாலூர்க்காரர்கள் *வையந்தகளியாவைக் காட்டுவர்கள். இங்ஙனே பலபலவுமுண்டு. இவை சாமானியர்களின் சொலவுகள்.

56. சிறிது படித்தவர்கள் தங்களை உ.வே யாகக் காட்டிக்கொள்ள விரும்பி *அரவணையாயாயரேறே* என்கிற பாசுரத்தில் *அதாதோ ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸா* என்கிற ஸூத்ரார்த்தமன்றோ அடங்கியுள்ளது. *சாமாறும் கெடுமாறும்* என்கிற பாட்டிலே *சாஸ்த்ரயோநித்வாத்* என்கிற ஸூத்ரார்த்தம் ஸ்பஷ்டமாகக் காண்கிறது. *திருக் கண்டேனென்கிற பாட்டிலே *தத் து ஸமந்வயாத்* என்கிற ஸூத்ரார்த்தம் அக்ஷரந் தோறுமன்றோ ப்ரகாசிக்கிறது. *ஆவாரார் துணையென்கிற பாசுரம் ஆனந்தமயாதி கரணஸாரமென்பதில் ஸந்தேஹமுண்டோ? *ஜந்மாத்யஸ்ய யத:* என்கிற ஸூத்ரமே *பிறந்தவாறும் வளர்ந்தவாறுமென்கிற திருவாய்மொழியாகப் பரிணமித்துவிட்டது— என்று அடுக்கிக்கொண்டே போவர்கள். அன்னவர்களுக்குத் துணைவரே இக்கட்டுரை காரரும் பெரிய திருமொழியில் முதற்பதிகமும் இரண்டாம் பதிகமும் (வா) என்று தொடங்குகிறபடியால் வாதிஹம்ஸாம்புதாசார்ய சிஷ்யரைக் காட்டுகிறது; மூன்றும் பதிகம் (மு) என்று தொடங்குவதால் (முக்திவார்த்தா ந தாத்ருக்விதாநாம்) என்றது நினைவூட்டப்படுகிறது. நான்காம்பதிகம் (ஏ) என்று தொடங்குவதால் *ஏரண்டோபி

த்ருமாயதே* என்னத்தகுவர் இக்கட்டுரைகாரர் என்று காட்டுகிறது என்னுங்கணக்கிலே எழுதிக்கொண்டு போகிறார். ஆனால் இவரை இன்னாரென்றறியேன்.

57. இக்கட்டுரையில் மிகவும் ஸாரமும் ஸத்யமுமான வாக்கியமொன்றே—(பக்கம் 83ல்) "ஸ்ரீரங்காதிகளில் திருவத்யயனோத்ஸவத்தை ப்ரதமம் ஏற்படுத்தினார் கலியன்; அதை ஸ்தாபனம் செய்தருளினார் தேசிகன்" என்பது. அந்த திருவத்யயனோத்ஸவத்தில் ஸ்வாமி பாஹ்யராகவேயிருந்து வருவதற்கு எது காரணமென்பதை விவரித்திருந்தால் மலர் மிகமிகக் கமழும். ஸ்தாபனம் செய்தருளினவிதம் எத்தகைத்தோ?

## தேசிகனும் ஹயக்ரீவனும் என்ற கட்டுரையினாராய்ச்சி.

58. இக்கட்டுரைகாரர் ஸங்கேத பத்தராயிருக்கச்செய்தேயும் கூடியமட்டில் ப்ராமாணிகர்போல் காணப்படுகிறார். இவர்க்கு ஒன்றேயுணர்த்தி நிற்போம். "இன்னுமொரு நூற்றாண்டிரும்" என்கிற ஆசாஸனம் ஆசார்யருடைய நிர்யாண ஸமனந்தரம் தோன்றியதாக நினைத்து இவர் ஏதோ எழுதுவது மருளின் மேன்மை. *பச்யேம சரதச் சதம், ஜீவேம சரதச் சதம்* என்னுமாபோலே ஆசார்யர் திடகாத்திரராய் வாழ்ந்தருளுங் காலத்திலேதான் 'இன்னுமொரு நூற்றாண்டிரும்' என்று வாழ்த்துவது. இக்கட்டுரைகாரர் அபிமானிக்கிற இவ்வாசாஸனவாக்யம் உண்மையில் மிகமிக அர்வாசீனமாயினும் இதைப்பற்றி எழுதிவைத்திருப்பவர்கள் ஸ்வாமியின் எழுபது பிராயத்தில் இது தோன்றின தாகத்தான் எழுதிவைத்துள்ளார்கள். பஹுதாந்யஹூ ஆவணிமீ ஹஸ்தநக்ஷத்ரத்திலென்று இம்மலரிலும் (பக்கம் 201ல்) விளங்கக் காணலாம். இதுபற்றி நாம் ஏற்கெனவே நவீந கல்பநா நிரூபணங்களில் விரிய வரைந்திருப்பதனால் இங்கு இவ்வளவே போதும். ஒரு நூற்றாண்டுக்குமேல் வாழ்வதற்கும் 'இன்னுமொரு நூற்றாண்டிரும்' என்ற ஆசாஸனத்திற்கும் ஸம்பந்த லவலேசமுமில்லையென்பதை இவர் தெளியவுணரவேணும். உண்மையில் ஸ்வாமியின் நிர்யாணானந்தரமே நெடுங்காலங்கழித்து இது தோன்றினதென்பதை இக்கட்டுரை நிலைநாட்டிவைத்ததற்கு மகிழ்வோம். ... ❀

## ஆசார்யவைபவக் கட்டுரையின் ஆராய்ச்சி.

59. இப்போது நாம் ஆராயும் மலரில் (பக்கம் 11ல்) ஆசார்யவைபவம் என்று தலைமேலிட்டு ஸ்ரீமத்வேதாந்த தேசிகர், சரித்திரம் எழுத ஆரம்பிக்கப்பட்டு (பக்கம் 35 முடிவில்) மொட்டையாக நிறுத்தப்பட்டு—இதன் தொடர்ச்சியை நூற்றறுபது பக்கங்கள் தாண்டிப் பார்க்கவேண்டியதாக [தொடர்ச்சி 193-ஆம் பக்கம்] என்று காட்டி, பக்கம் 193ல் மீண்டு ஆரம்பித்து (பக்கம் 206ல்) முடிக்கப்பட்டு விட்டது. இதை யெழுதியவர் இன்னாரென்று குறிப்பிடவேயில்லை. முடிவில் "ஆதாரம் த்ருதீய ப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ர ஸ்வாமி அருளிய மூவாயிரப்படி குருபரம்பராப்ரபாவம் என்றுள்ளது. ஒன்றோடொன்று ஈஷத்தும் ஸம்பந்தப்படாத மூவாயிரப்படி குருபரம்பராப்ரபாவங்கள் மூன்று பதிப்புகள் நாம் பார்த்திருக்கிறோம். மைஸூர் ஸ்ரீபரகால மடத்தின் மூலமாகத் தெலுங்கு லிபியில் அச்சிட்டதொன்று; அதற்கு முன்னே தமிழ் லிபியில் அச்சிடப்பட்டவையிரண்டு.

இப்போது இரண்டு மாதங்களுக்கு முன்பு 2—10—68 தேதியிட்டு 'லிப்கோ வெளியீடு' என்று வெளியிடப்பட்டது நான்காவது. இவை ஒன்றோடொன்று ஸம்பந்தப்படாதவை யென்று எத்தனை தடவை சொன்னாலும் எழுதினாலும் புநருக்தி தோஷம் வாராது.

60. முதன்முதலாக இதையெழுதியவர் **கடல்மங்கலம்வீராச்சி**யென்பவர் என்பதாக வடகலை ஸம்பிரதாய துரந்தரர்களே (அவர்களாகிறார்) திருப்புட்குழி ஸ்வாமி திருவடியான தன்றி. பட்டப்பா தாதாசாரியர் ஸ்வாமி, சாமா. திருமலைதாதாசாரியர், சேட்லூர் நரஸிம்ஹாசாரியர் ஆகிய இம் மூவரும் எழுதிவைத்திருப்பதை நாம் பல நூல்களில் நிரூபித்திருக்கிறோம். இம் மூவரில் முந்தின இருவர் வெளியிட்ட சுவடிகளைக் காண இப்போது சிறிது சிரமப்படவேண்டி யிருந்தாலும் மூன்றாமவர் [சேட்லூரர்] எழுதி யிருப்பது எளிதாகக் காணக்கூடியது. வடகலை குருபரம்பராப்ரபாவம் புராதனமாக இரண்டுபடிகள் இருந்ததாகவும், இரண்டும் என்றைக்கோ லோபித்துவிட்டதாகவும், பின்புள்ளார் எழுதும் சரித்திரங்கள் ஸர்வாத்மநா நிராதாரமென்பதாகவும், [தாம் ஒருவர் மட்டுமே ஸாக்ஷாத் தேசிகனிடத்திலோ ஹயக்ரீவரிடத்திலோ உபதேசம் பெற்று எழுதுவதாகவும்] எழுதிக் கொட்டையெழுத்தில் பதிப்பித்திருக்குமது எங்குங்காணக் கிடைக்கும். ஆங்கீரஸஹு சென்னை நிகம பரிமள அச்சுக்கூடப் பதிப்பு.

61. இவற்றையெல்லாம் நாம் அலசியலசிப் பலகால் காட்டின பிறகு, நமது ஸுஹ்ருந்மணியும் லேககப்ரவரருமான ஸ்ரீஉவே. ஒப்பிலியப்பன் ஸ்ரீராமதேசிகாசாரியர் தாம் ஒரு தேசிக சரித்திரம் எழுதத் தொடங்கி முகப்பிலேயே "ஸ்ரீதேசிக சரித்திரம் பல்வேறு பதிப்புகளில் வெளிவந்துள்ளது; அவற்றில் நிகழ்ச்சி முறை, நடந்த இடம் காலம் முதலியவற்றில் வேறுபாடு காணப்படுவது உண்மையே" என்றெழுதிவைத்தார். "இல்லையில்லை, சிறிது வேறுபாடுதான் காணப்படுகிறது; அதிக வேறுபாடுகள் இராது" என்று அவர் தாமே சோதிடம் சொல்ல வருவர். பிராட்டி "மமைவ துஷ்க்ருதம் கிஞ்சித்" என்றவுடனே "மஹதஸ்தி ந ஸம்சய:" என்றான். இவர் 'நிகழ்ச்சி முறையில் வேறுபாடு' என்றதோடு நிற்கவில்லை; இடம் காலம் எல்லாவற்றிலும் வேறுபாடு காண்பதாக எழுதியுள்ளார். இதற்குமேல் **(முதலிய)** என்று ஆதிபதமொன்று. ஒரு ஸதஸ்ஸில் நிறுத்தி விசார்யமாணே...... அலம் அலம் அலம்.

62. கண்ணபிரானுடைய சரிதைகளில் *கன்று குணிலாவெறிந்தாய்!* என்னப் பட்ட சரிதையொன்று. அதாவது, வத்ஸாஸுரனைக் கொண்டு கபித்தாஸுரனை முடித்தது. இது, முள்ளைக்கொண்டே முள்ளைக் களைவதொக்கும். அதே போல, இவ்வகுப்பினர் ஒவ்வொருவரும் தம்மை யோக தசையில் தேசிகனை ஸாக்ஷாத் கரித்தார்களாக எண்ணி எழுதிவைத்துள்ள தேசிக சரித்திரங்கள் பிறரால் கண்டிக்கப்பட வேண்டிய அவசியமேயில்லை. இவை பரஸ்பரம் மோதி முடிந்து போனவையே. "அப்படியில்லை; ஒவ்வொருவரெழுதின சரித்திரமும் ஜீவித்தேயிருக்கின்றது" என்று வாய்திறக்க வழியுண்டாகில் திறக்கலாமே. இவர்கள் சில சுவடிகளைக் கற்பனை செய்யத் தொடங்கினகாலத்தில் அச்சுவடிகளுக்குப் பரஸ்பர விரோதமில்லாமலிருக்கவேணு மென்பதைக் குறிக்கொள்ளாமல் தத்தக பித்தகவென்று எழுதிவைத்தபடியாலே தும்மட்டிக்காய் பட்டர் கதையாய் சிக்கிக்கொண்டு திணறுகிறார்கள்.

# இடையில் இரு ஸஹோதரர்களின் விநோதக் கதை

63. ஜ்யேஷ்டரான ரங்காசார் முப்பது வருஷம் உத்யோகம் பண்ணிப் பென்ஷன் பெற்றார். அவருடைய வீதியில் வேறொருவர் உத்யோகம் பண்ணுகையில் லஞ்சம் வாங்கிப் பிடிபட்டுக் கஷ்டமநுபவிக்கிறார். அப்போது இந்த ரங்காசார் சொல்லுகிறார்— 'நானும் முப்பது வருஷம் உத்யோகம் பண்ணினேன்; ஒருவரிடமும் ஒரு கீரைத்தண்டும் வாங்கியறியேன்; நூறுமாயிரமும் கொடுக்க வருவார்கள்; ஒரு காலணாகூட வாங்கியறியேன்; யாரையும் கிட்ட நாடவிட மாட்டேன்' என்று தடபுடலாகச் சொல்லுவர். மேல் கதை கேளுங்கள். இவருடைய மகன் உத்யோகம் பண்ண ஆரம்பித்தான். நூறு ரூபா சம்பளத்திலிருக்கிறான். ஒரு நாள் ஒரு ஆப்தர் வந்து 'திருக்குமாரர் நல்ல உத்யோகத்தில் அமர்ந்திருப்பதாகக் கேள்விப்பட்டேன்; நல்ல ஸம்பாத்யந்தானா?' என்றார். அதற்கு இவர் பதில் சொல்லுகிறார்—'என்ன ஸம்பாத்யம், மண்ணாங்கட்டி ஸம்பாத்யம். நான் உத்யோகம் பண்ணினபோது அப்படி நூறு இப்படி இரு நூறு, அப்படி ஆயிரம் இப்படி ஐயாயிரம் வாங்கினேன், எத்தனை வீடுகள், எத்தனை காணிகள் நான் வாங்கியிருக்கிறேனென்பது உமக்குத் தெரியாதா? எனக்குக் கிடைத்த ஸ்வல்ப சம்பளத்தில் என்னாகும்? கையிலாகாத இந்த முட்டாப்பயல் ஒன்றையணா சம்பளத்தோடு வீடு வந்து சேருகிறது. பசங்கள் பிறப்பதோ வருஷம் தப்பாது; எப்படித்தான் பிழைக்கப்போகிறதோ!' என்கிறார். முன்பின் வார்த்தைகளின் சுவையறிந்தீர்களா?

64. இனி கனிஷ்டரான ராகவாசார் கதையைக் கேளுங்கள். இவர் பண்டிதர்; வித்வான்களின் ப்ரசம்ஸை வரும்போது "நான் பூர்வஜன்மவாஸனையினால் வித்வானனேனேயொழிய ஒருவரிடம் ஒரு நாள் ஒன்று வாசித்தறியேன்; யாரை வேணுமானாலும் கேட்டுப்பாருங்கள்; ஸரஸ்வதீ கடாக்ஷத்தால் வித்வானனேனேயொழிய சப்த மஞ்ஜரி பாஷா மஞ்ஜரிகூட நான் வாசித்தது கிடையாது" என்று வானம் பிளக்கப் பேசுவர். ஒரு நாள் ஒரு பெரியவர் வந்து இவரைக் கண்டு—'குமாரர்கள் நன்றாக வாசிக்கிறார்களா? கௌமுதி வாசிக்கிறார்களாமே, ரொம்ப ஸந்தோஷம், தேவரீரைப்போல வித்வான்களாகட்டும்' என்றார். அதற்கு இவர் சொல்லுகிறார்-"நான் கஷ்டப்பட்டுத் தொண்டை நோக மண்டை நோக பாடம் சொல்லுகிறேனேயொழிய, பிறகு புத்தகத்தைத் தொடுவதே கிடையாது, ரொம்ப விளையாட்டு புத்தி, நித்யம் ஸினிமா; நான் வாசிக்கும்போது ஒரு நிமிஷம் வாய்மூடுவேனா? ஒரு விளையாட்டுக்குப் போவேனா? இரவும் பகலும் கத்திக் கத்தி வாசிப்பேன்; அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் இதென்ன தலைவேதனை! என்றுகூட வெறுப்பர்கள். இந்த பசங்கள் புத்தகத்தைத் தொடுகிற பாவத்திலேயே போவதில்லையே. இந்த சோம்பேறிப் பசங்கள் என்னைப்போல வித்வான்களாகி விடமாட்டார்களோ? ஸ்வாமீ! நன்றாக ஆகுவர்கள்" என்று.

65. இப்படிப் பல நூறு கதைகளுண்டு. இந்த நவீன கோஷ்டியாருடைய எழுத்துக்களும் பேச்சுக்களுமெல்லாம் இதே கதையில்தா னுள்ளவை. எதையும் நாம் ப்ரதிஜ்ஞையோடு நிறுத்துவது கிடையாதென்பதை உலகமறியுமே. கேண்மின் காண்மின். (மலர் பக்கம் 201ல்) "ராமாநுஜ தயாபாத்ரம் தனியன் அவதாரம்" என்று

மகுடமிட்டு—குமாரவரதாசாரியர் திருநாராயணபுரத்தில் தேசிகனிடத்தில் பகவத் விஷய காலக்ஷேபம் பண்ண ஆரம்பிக்கையில், ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ரஜீயர் அந்த காலக்ஷேப கோஷ்டியில் அந்வயியாமலிருக்க, தேசிகன் அவரையழைத்து ஜீயரே! நீர் ஏன் இதில் சேரவில்லையென்று கேட்க, தேவரீரைவிட மஹாமேதாவியான திருக்குமாரரிடத்திலே ஸதீர்த்த்ய ப்ரதிபத்திமட்டுமன்றிக்கே ஆசார்ய ப்ரதிபத்தியும் பண்ண நினைத்திருக்கு மடியேன் அவரிடத்தில் இது காலக்ஷேபம் பண்ணப் போகிறேன் என்று ஜீயர் சொல்ல, தேசிகன் மிகவுமுகந்து அப்படியே செய்யுமென்ன பிறகு ஜீயர் நயனவரதாசாரியரிடத்தில், காலக்ஷேபம் பண்ணத் தொடங்கி அப்போது ராமாநுஜாபாத்ரத் தனியனைப் பண்ணினார் என்றெழுதியுள்ளார்கள். இவர்களே சோளங்கிபுரம் தொட்டயாசாரியர் இயற்றியதாக ஒரு வைபவ ப்ரகாசிகை கல்பித்தபோது அதில் "ப்ரஹ்மதந்த்ர சதுராய யோகிநே" என்கிற சுலோகத்தினால் திருக்குமாரரும் ஜீயரும் சேர்ந்து ஸ்வாமியிடத்திலேயே பகவத் விஷய காலக்ஷேபம் செய்ததாக பரிஷ்காரமாய் எழுதிவைத்திட்டார்கள். அதை யெடுத்துக் காட்டிக் கேட்டால் அது கல்பிதம், அப்ரமாணம் என்பர்கள்; அதற்குப் பெருமை சொல்ல வேண்டும்போது "இது ச்லோகபத்தம்; அது இஷ்டப்படி எதையும் நுழைக்கக்கூடிய தமிழ் வசன நூல்; அது அப்ரமாணம் என்பர்கள். சிறிது பெரிது என்கிற வாசியில்லாமல் எந்த வரலாற்றையெடுத்துக்கொண்டாலும் இதே கதிதான். இத்தகைய அஸம்பத்த ப்ரலாபங்களில் சிறியார் பெரியார், விவேகிகள் அவிவேகிகள் என்னும் வாசியற அனைவரும் ஏககண்டர்களே.

66. தேவாலயங்களில் எம்பெருமான்களுக்கும் ஆழ்வாராசாரியர்களுக்கும் ஆண்டுதோறும் மஹோத்ஸவம் நடக்குமாபோலே இத்தகைய விசேஷங்களையெல்லாம் நாம் ஆண்டுதோறும் ஆஸ்திகர்களுக்கு உபகரித்து உண்மைகளை வெளியிட்டுவைக்குமாறு செய்து வருகிறார்களே, இதுதான் இவர்கள் செய்து போரும் மிகச்சிறந்த உபகாரம். ஸ்வாமி தேசிகன் உபகார ஸங்க்ரஹமென்றொரு ரஹஸ்ய மருளிச்செய்து அதன் முடிவில் ஸாதித்தருளுகிறார்—*அயமப்யபரோ மஹோபகார: கலிதோஷாவில சேதஸாம் நராணாம், கருணாஜலதிர் யதேஷு தேவ: ப்ரதயாமாஸ மயா நிஜோபகாராந்.* என்று. இதன் கருத்தாவது, ஆழ்வார்களுமாசாரியர்களும் செய்தருளின உபகாரங்களுக்குமேலே (தேசிகனுகிற) தம்மைக்கொண்டு இவற்றை எம்பெருமான் வெளியிடுவித்ததும் ஒரு மஹோபகாரமென்கை. அதேபோல, அந்த தேசிகன் தாமே அடியேனுக்கு சக்தியளித்து இத்தகைய யதார்த்தங்களையெல்லாம் நன்கு வெளியிடுவிப்பதுண்டே, இது தேசிகன் செய்தருளின உபகாரங்களுக்கெல்லாம் சிகரமானதென்னத் தட்டில்லை. இல்லையேல் இவ்விருள் தருமாஞாலத்தில் இருளும் மருளும் மலிய இவர்கள் செய்து போரும் துஷ்ப்ரசாரங்களினால் பாமரவுலகம் வஞ்சிக்கப்பட்டுப் பாழாய்ப் போயிருக்குமன்றோ.

## தோரண பாதரக்ஷாதி ப்ரபாவ பரம்பரைகள்.

67. மாண்டொழிந்தவர்களுக்கு உயிரிருப்பதாகவைத்து இந்திர ஜாலம் காட்டுங் கணக்கிலே, நமது நூல்களில் [நான்கு பாஷை நூல்களிலும்] பலகால் கண்டிக்கப் பட்டொழிந்தவற்றையே அபூர்வம் போல் எழுதிக்கொண்டிருக்குமிவர்கள் எந்த

மூலையிலாவது எந்த பித்தனுவது மயங்கட்டுமேயென்று நினைத்து, தோரண பாதரக்ஷைக் கதை, ச்ராத்த நிமந்த்ரித விப்ரலம்ப கதை, காலை வாரியிழுத்துத் தெருவிலே புரட்டித் தள்ளின கதை, ஏகாதசிப் பொங்கல் கதை, ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரபிருதை ஸ்தாபித்துக் கொள்ளக் கண்டபேரோடும் சண்டையிட்ட கதை, இன்னும் அநுவதிக்கவும் வெள்க வேண்டும்படியான அபசதக் கதைகள் பலவும் எழுதியுள்ளார்கள். நாம் நெடுநாளாகக் கொண்டிருந்த பெரியதொரு ஸந்தேஹம் இப்போது தீர்ந்தது. பரம ஸாதுவும் பரம ஸாத்விகரும் அஜாத சத்ருவுமான ஸ்வாமியை ஸ்ரீரங்கவாஸிகள் ஹிம்ஸித்தும் பரிப வித்தும் போந்தது எதற்காகவென்று நாம் விசாரங்கொண்டிருந்தோம். இப்போதன்றே இந்த மலரால் மருமம் தெரிந்தது. (மலரில் பக்கம் 193 காண்க.) பிள்ளை லோகாசாரியர் நம் ஸ்வாமி தேசிகன் பக்கலிலே ஆச்ரயித்து ஸ்ரீபாஷ்யம், திட்டுச்சுவடி ரஹஸ்யம், ககுரவிந்த நிகம பரிமலம் எல்லாம் காலக்ஷேபம் பண்ண ஆரம்பித்து விட்டாராம்; தனியனும் ஸாதித்து விட்டாராம்; யார்? பிள்ளை லோகாசாரியர். அதனுல் ஸ்ரீரங்க வாஸிகளுக்குப் பொருமையுண்டாகி விட்டதாம். அதனுல் தான் தோரண பாதரக்ஷா ப்ரஹாராதி பரிபவ பரம்பரைகளைச் செய்ய ஆரம்பித்து விட்டார்களாம். இதுகாறும் இது உலகுக்குத் தெரியாமலே போயிற்றே.

68. சந்திரகிரி காளமேகாசாரியரென்பவர் செய்த ராமாநுஜ தயாபாத்ர வியாக்கியானத்தில் இக்கதைகளெல்லாம் வாஸ்தவமேயென்பதற்கு அசைக்க முடியாத ப்ரமாணங்களும் காட்டியிருப்பதாகச் சில ப்ராமாணிகர்கள் தெரிவிக்கிருர்கள். தீர்த்தப் பிள்ளையென்பவர் ஸ்வாமிக்கு ஸஹஸ்ரநாமம் பண்ணியிருக்கிருராம். அதில்,

> **“தோரணீக்ருத ஸத்பாதரக்ஷா சோதித மஸ்தக:,**
> **நிமந்த்ரித மஹாஸ்வாமி த்ரயவிப்லுத பைத்ருக:,**
> **ஹயக்ரீவத்ராத பித்ர்ய இதி மித்த்யோக்திகோசர:,**
> **ஏகாதச்யாம் துஷ்ட விப்ரலிப்த முத்கான்ன விக்ரஹ:,**
> **சிபிகாஸ்த மஹாசார்ய சிஷ்யாக்ருஷ்ட பதத்வய:,**
> **ஸ்வகீயக்ருஹஸௌதாதி ஸ்வயம்நிர்மாண கோவித:,**
> **அல்பசங்காபஹிச்சங்காஸ்தம்பநக்க்யாத வைபவ:,”**

என்றிப்படி பல சுலோகங்களை அந்த காளமேகாசார் உதாஹரிக்கிருர். ஏகாதசியன்று ஒரு துஷ்டன் ஸ்வாமி கையில் வெண் பொங்கலைக் கொடுத்து ‘தின்னும் இதை’ என்று நிர்ப்பந்தித்ததாக மட்டும் இதுவரை கதை கேட்டிருந்தோம்; மேலே காட்டின ப்ரமாணங்களில் “துஷ்ட விப்ர லிப்த முத்காந்ந விக்ரஹ:” என்றிருக்கையாலே பொங்கலைக்கொண்டு மஹாபாபி ஐயோ! ஸ்வாமியின் ஸர்வாங்கத்திலும் பூசிப் பரிபவித்ததாகத் தெரிகிறதே! அப்படிகூடவா நடந்திருக்கும்? பொருமையின் பணியந்தோ!

69. இது தவிர அபூர்வமான வைபவமொன்று எழுதியிருக்கிருர். அந்த காளமேகாசார். (அதாவது) “ஸ்வீய பாஷ்யார்த்த சுச்ரூஷு யதிராஜ நிஷேவித:, விஷ்ணுசித்த நடாதூருவரதார்யாதிஸேவித:.” என்றும், “ஸ்ரீபாஷ்யார்த்த ப்ரவசன விதௌ பாடவம் ப்ரேக்ஷமாணு:, வேதாந்தார்யே யதிகுலபதி: விஷ்ணுசித்தார்யவர்ய:,

அம்மாளாக்யோ வரத குருராட் வாதி ஹம்ஸாம்புதச்சேதி ஏதேஅச்ருண்வந் பதக மலயோச் சிஷ்யதா மேத்ய பாஷ்யம்.'' என்னு மிரண்டு சுலோகங்களையெடுத்துக் காட்டியிருக்கிறார். (அதாவது) ஸ்வாமி *பாஷ்யாதி க்ரந்தலேசோபி அவஹிதமநஸாம் ஐதமர்த்த்யம் பஜேத* என்றும் *ஏகக்ரந்த சகலாஸ்வாரஸ்யம் பஹுக்ரந்த ஸ்வாரஸ்யாய க்ராஹ்யம்* என்றும் துணிந்து நொறுக்கித்தள்ளி பாஷ்ய நிர்வாஹம் பண்ணியருளு கிறாரென்று கேள்விப்பட்டு ஸ்ரீபாஷ்யகாரர் எங்களாழ்வான் நடாதூரம்மாள் கிடாம்பியப் புள்ளார் முதலானவர்களும் திருநாட்டிலிருந்தோடிவந்து ஸ்வாமி திருவடிகளிலே படுகாடு கிடந்து ஸ்ரீபாஷ்யம் கேட்டு உய்ந்தார்களென்கை. எப்படிப்பட்ட பெருமை.

70. அந்த ஸஹஸ்ரநாமத்திலேயே "கோவிலாத்தான்ஸுதாத்ராத பாதரக்ஷா பராபவ:, குப்யச்சோளீநிநைஜோக்தி ப்ரகாசித மநோவ்யத:.'' என்றொரு ச்லோக மிருப்பதாகவும் எடுத்துக் காட்டுகிறார். இதற்கு விவரணமும் செய்திருக்கிறார். (அதாவது) *வாழியவன் கோவிலாத்தான் மகளைக் கொண்டாடிக் கொண்டிருக்கும், திதிலாநல்லோர்திரள்* என்று நிச்சலும் வாழ்த்துவதற்கு மூலமான இதிஹாஸமாம். பாதரக்ஷைகளைத் தோரண மாலையாகக் கட்டிப் பரிபவித்தபோது **கோவிலாத்தான்** என்பவருடைய திருமகளார் ஓடி வந்து விலக்கிக் காப்பாற்றினாளாம்; அதற்கு நன்றி பாராட்டி ஒரு பெருந்திரள் அவளைக் கொண்டாடிற்றும். இதற்குமேல் *குப்யச்சோளீநி நைஜோக்தி ப்ரகாசித மநோவ்யத:* என்ற திருநாமத்தின் பொருள் உலகமறிந்ததே. ஸ்வாமி ஸாதித்த பகவத்த்யான ஸோபானத்தில் (9) கிரீட வர்ணந ச்லோகத்தில் ஸ்ரீரங்கநாதனுடைய திருக்குழலொழுங்கை வருணிக்கையில் (குந்தலங்கள்) குப்யச்சோளீ வசன குடிலங்களாயிருப்பதாகக் கூறினர். இதனால் ஸ்வாமியின் திருவுள்ளத்தில் எவ்வளவு கொதிப்பு இருந்ததென்பது தெரியவரும். 'ஆண்கள்தான் நம்மைப் பரிபவிக்கிறார்களே, பெண்களாவது ஆதரிப்பார்களோ' என்று ஒரு அம்மையாரை அணுகினவளவிலே அவளால் கிடைத்த பருஷோக்திகள் உள்ளே தங்கமாட்டாமல் வெளிப்பட்டனவென்று தேரழுந்தூராண்டவன் அற்புதமாக உபந்யஸிப்பர்.

71. மேலே ப்ரஸ்தாவித்த காளமேகாசாரியர் பகவத்த்யாந ஸோபானத்திற்கு வியாக்கியானமியற்றியிருக்கிறார். அதற்கு மங்கள ச்லோகம்—"ரங்கதாம்நி விசுத்தஸ்ய தேசிகஸ்ய ஸமாச்ரயாத், மநோ விமலதாம் யாதம் யஸ்ய தம் தேசிகம் பஜே.'' என்று அதிமதுரமாக இட்டிருக்கிறார். இதன் விவரணம் வருமாறு—ஸ்வாமி ஸாதித்த சில்லரை ரஹஸ்யங்களில் ஒன்றான ரஹஸ்ய மாத்ருகையின் முடிவில் "விசுத்ததேசிகவதா ரங்கதாம்நி வ்யலிக்யத'' என்றுள்ளது. தாம் ரங்கதாம்நி வந்து சேர்ந்து விசுத்ததேசிகரானதை ஸ்வாமி தாமே ஸ்பஷ்டமாகக் காட்டியருளினர். "ஸதாசார்ய ப்ரஸாதேந ரங்கதாம்நி வ்யலிக்யத'' என்றிடாமல் "விசுத்ததேசிகவதா ரங்கதாம்நி'' என்றிட்டிருப் பதை ஆழ்ந்து நோக்கவேண்டா; மேலெழ நோக்கினாலும் போதுமே. பகவத்த்யாந ஸோபான முடிவில் "ரங்காஸ்தாநே—வித்வத்ஸேவா விமலமநஸா'' என்றதையும் இத்தோடிணக்கினால் ஸ்ரீரங்கத்திற்கு வந்து விசுத்ததேசிக ஸமாச்ரயணம் பெற்று தாத்ருச வித்வத் ஸேவையினாலே விமல மநஸ்கராக ஆயினர் தேசிகன் என்பது கல்வெட்டாம்.

## ஸ்ரீதேசிக காளிதாஸ ஸம்வாத விமர்சம்

72. சில ஏடுகளைத் தள்ளிப் பார்ப்போம். தேசிகனும் காளிதாஸரும் வார்த்தையாடுவதாக ஒரு கட்டுரையமைப்பு. திருப்பாணாழ்வார் அமலன் விமலன் நிமலன் நின்மலன் என்றாற்போல அரஸம் விரஸம் நீரஸம் என்றார் ஒருவர். ரஸபுஞ்ஜமயமான ஸம்வாதம் கேளீர்.

# பூர்வாசார்யபரிஷத்தில் அர்த்த நிஷ்கர்ஷம்

— திருநாட்டிலிருந்து பல ஆசாரியர்கள் வந்து பரிஷத்தில் வீற்றிருக்கின்றனர் —

**நம்மாழ்வார் ஆளவந்தார் எம்பெருமானார்**

**ஆழ்வான் பட்டர் பிள்ளான் நம்பிள்ளை லோகாசார்ய வேதாந்தாசார்யெள**

இவ்வாசாரியர்களின் முன்னிலையில் மாதவனும் கேசவனுமாகிய வாக்மிகள் இருவர் உபய வேதாந்தார்த்த தத்துவங்களை சர்ச்சை செய்கிறார்கள். சீரிய சிங்காசனத்தில் வீற்றிருக்கும் [மேலே கண்ட] ஆசாரியர்கள் சர்ச்சையில் கலந்துகொண்டு தீர்ப்பு கூறுவர்.

73. **மாதவன்:**—கேசவா! நீ நியாய வேதாந்தங்களில் நல்ல வல்லமை பெற்றிருக்கிறாயென்பது தெரியும்; ஸம்ப்ரதாய க்ரந்தங்களிலும் ஆழ்ந்திருப்பதுண்டோ? எந்த ஸம்பிரதாயத்தில் உனக்கு அதிகமான ப்ரவேசமும் அபிநிவேசமுமுள்ளது? சொல்லு பார்ப்போம்.

**கேசவன்:**—எந்த ஸம்பிரதாயத்திலென்று நீ கேட்பதால் இரண்டு ஸம்பிரதாயங்களுண்டென்று நீ நினைத்திருப்பதாகத் தெரிகிறது. அப்படியில்லை. உள்ளது ஒரே ஸம்பிரதாயந்தான். அதாவது பகவத் ராமாநுஜ ஸம்பிரதாயமென்பதொன்றுதான் ஸ்ரீவைஷ்ணவமரபிலுள்ளது. பகவத் ராமாநுஜர்க்கு முன்பு ஆசார்யர்களில் க்ரந்தங்களருளிச்செய்தவர் ஆளவந்தாரொருவரே; அவர்க்குப் பிறகு பல ஆசாரியர்கள் பலபல க்ரந்தங்கள் உபய பாஷைகளிலும் அருளிச்செய்துள்ளார்கள். அவர்களனைவரும் பகவத் ராமாநுஜரைப் போற்றுமவர்களேயொழிய ஒருவர்கூட வேறுபட்டவரல்லர். ஆகவே ஸகலாசார்யர்களினுடையவும் ஸம்ப்ரதாயம் ராமாநுஜ ஸம்ப்ரதாயமென்று ஒன்றுதானே. அப்படியிருக்க 'எந்த ஸம்ப்ரதாயத்தி' லென்று நீ கேட்பது உசிதமாக இல்லையே.

74. **மாதவன்;**—நீ சொல்லுவது தத்துவமே; ஆனாலும் தென்கலை வடகலை, மடம் முனித்ரயம் மன்ஸாலகட்டை என்றிப்படி பேதங்கள் தோன்றியிருப்பதை அபலாபம் பண்ண முடியாதல்லவா? ஆகவேதான் எந்த ஸம்பிரதாயத்திலென்று நான் கேட்டது.

**கேசவன்;**—நீ சொன்னது வாஸ்தவம்; ஒப்புக்கொண்டேன். நான் அணியும் புண்ட்ரத்தைப் பார்த்ததனாலேயே நான் இன்ன ஸம்ப்ரதாயஸ்தனென்பது உனக்குத் தெரிந்திருக்குமே. நானே வாய்விட்டும் சொல்லுகிறேன். நான் வடகலை ஸம்பிரதாயஸ்தன். ஆனால் நான் மற்றவர்களைப்போல் விவேகசக்தியை உபயோகிக்கமாட்டாத மூர்க்கனல்லேன். வீண்பிடிவாதக்காரனல்லேன். நான் மஹர்ஷி வாஸுதேவாசார்ய ஸ்வாமியிடத்திலும் ஸ்ரீமத்பரமஹம்ஸ. கருடபுரம் ஸ்வாமியிடத்திலும் சிலகாலம் நெருங்கிப் பழகினவன். நவீனர்களின் ஸங்கேதங்களுக்கு நான் கட்டுப்பட்டவனல்லேன்.

ஆனால் என்னைப்பற்றி நானே சொல்லிக்கொள்வது ரஸமன்று. ஸயூத்த்யர்களின் அதர்க்கணச் செயல்களை ஸஹியாமல் குழுவினின்றும் துணிந்து விலகிக்கொண்ட ஸ்ரீமான் V. D. ராமஸ்வாமி ஐயங்காருக்கு மேற்பட்டவனாகவே என்னை நினைக்கலாம். உனக்கு விவக்ஷிதமென்ன? அதைச் சொல்லு.

75. **மாதவன்:**—நீ வடகலையென்பதை நான் தெரிந்துகொள்ளாமலில்லை; நீ எந்த ஸம்ப்ரதாயஸ்தன்? என்று நான் கேட்கவில்லையல்லவா. எந்த ஸம்பிரதாயத்தில் உனக்கு அதிகமான அபிநிவேசமுள்ளது? என்றல்லவா கேட்டேன். அவரவர்களுக்குத் தம்தம் ஸம்பிரதாயத்தில்தான் பெரும்பாலும் அபிநிவேசமிருப்பது என்று தெரிந்திருக்கச் செய்தேயும் நான் இப்படி கேட்டது, நீ ரஸிகன், விவேகி, பிராமாணிகன், மனச்சாட்சியை மீறுதவன் என்று கேட்டிருந்ததனாலேயே.

76. **கேச;**—மாதவா! இந்த பீடிகையெல்லாம் மிகவும் அநாவச்யகம்; ஏதுக்கு வீண் காலயாபனம்? என்னோடு எந்தெந்த விஷயங்களைப் பேசவேணுமென்று நீ நினைக்கிறாயோ அவற்றைத் தாராளமாகப் பேசலாம். நீயும் மனம்விட்டுப் பேசு; நானும் மனம்விட்டுப் பேசுகிறேன்.

77. **மாத:**—இன்று திருப்பாணாழ்வார் சாத்துமுறையாதலால் அவ்வாழ்வாரைப் பற்றியே பேச விரும்புகிறேன். உண்மையாக என்னுடைய ஜிஜ்ஞாஸையைத் தெரிவிக்கிறேன். ஆழ்வார்கள் கோஷ்டியில் தொண்டக்குலத்தில் தோன்றினவர்களுள் திருப்பாணாழ்வார் தலைவர். *கிமப்யத்ராபிஜாயந்தே யோகிநஸ் ஸர்வயோநிஷு, ப்ரத்யக்ஷிதாத்மநாதாநாம் நைஷாம் சிந்த்யம் குலாதிகம்* என்கிற ஸர்வஸம்ப்ரதிபந்நமானதொரு ப்ரமாணத்தைக் காட்டி நில்லாதே சததூஷணியில் **"ஸ்த்ரீ தர்மிண்யாம் ஜநந்யாமிவ"** என்றொரு நிஹீநத்ருஷ்டாந்தத்தைக் காட்டி ரஸாபாஸப் படுத்தியிருப்பது பற்றி உன் கருத்து என்ன?

78. **கேச:**—இதற்கு நான் என்ன சொல்லுவது? ஸ்வாமிக்கு ஆழ்வார்களிடத்தில் விப்ரதிபத்திலேசமும் கிடையாது. என்ன காரணத்தாலோ அப்படியெழுதிவைக்க நேர்ந்தது. எதிரிகளுக்கு வாய்மூடியாக ஏதோ எழுத நேர்ந்துவிட்டதென்று அதை நாம் காணுக்கண்ணிட்டிருக்கவேண்டியதே. ஸ்வாமி திருவுள்ளத்திலும் அது பற்றி மிக்க அநுதாபமிருந்ததாகத் தெரிய வருகிறது. கேளாய்; மற்ற திவ்யப்பிரபந்தங்களிருக்க அவையொன்றுக்கும் வியாக்கியானமிடாதே அமலனாதிபிரானுக்குமட்டும் வியாக்கியானமிட்டது. 'அமலனாதிபிரான் வியாக்கியானம்' என்று பெயரிடாதே முநிவாஹநபோகமென்று திருநாமமிட்டது; அதுதன்னை ரஹஸ்யங்களிலே சேர்த்தது. ஆக இம்மூன்றையும் விமர்சித்தால் மருமம் புரியும்.

79. **மாத:**—இது காறும் இம்மூன்றையும் ஒருவர்கூட விமர்சித்ததில்லை. இன்று எனக்கு இது அபூர்வ ச்ரவணம். மஹாபாக்யம். அமலனாதிபிரானுக்குமட்டும் வியாக்கியானமிட்டது ஏன்? என்று ஒருவர் தாமாகவே கேள்வியைக் கிளப்பிக்கொண்டு *ஸ்வயமபி லிகிதம் ஸ்வயம் ந ஜாநாதி* என்னும் முறையிலே ஏதோ எழுதுகிறார். ஒருவன் கடன்காரன் வருவதைக்கண்டு விரைந்து வீட்டினுள்ளே புகுந்து குஸூலத்தில் மறைந்துகொண்டு 'அவன் வந்து கேட்டால் அப்பா இங்கில்லையென்று சொல்லிவிடு'

என்று மகனுக்குச் சொல்லிவைக்க, கடன்காரன் வந்தவாறே அவன் ஒன்றுங் கேளாதிருக்க 'அப்பா தொம்பை கூண்டிலில்லை' என்று மகன் தானாகவே சொன்னானென்று சிறுகதை கேட்டதுண்டு; அது கிடக்கட்டும். முநிவாஹநபோகமென்று பெயரிட்டது மர்மஸ்ப்ருக்கானதே. லோகஸாரங்க மஹாமுனிகளின் தோளிலே பாண் பெருமாள் ஏறிச்சென்றாரென்பதில் முன்பு அப்ரத்யயமிருந்தபடியாலே கலக்கம் தீர்ந்து தெளிந்தமை காட்டவே முநிவாஹனபோகமென்று விலக்ஷணமான திருநாமஞ்சாற்றி "நாண் பெரியோமல்லோம் நாம் நன்றும் தீதும் நமக்குரைப்பாருளரென்று நாடுவோமே" என்று முடித்தது வெகுரஸம்.

80. **கேச:**—பாசுரங்களின் வியாக்கியானமான இதனை ரஹஸ்யங்களில் சேர்த்துப் பரிகணித்ததுண்டே. அதுதான் ஸாரமான விஷயம். இதில் முதற்பாட்டில் முதலடியில் **ஆதி** என்றவிடத்திற்கு முனிவாஹனபோகம்—"இக்காரணத்வமும் மோக்ஷப்ரதத்வமும் ச்சத்ர சாமரங்கள்போலே ஸர்வலோக சரண்யனுக்கு விசேஷ சிஹ்னங்கள்" என்றது; மூலத்தில் மோக்ஷப்ரதத்வ ப்ரஸ்தாவம் இல்லாமலிருக்கச் செய்தேயும் ஜகத்காரணத்வத்தோடு அதையுங்கூட்டியருளிச்செய்தது நவீனர்களின் இருள் துயக்கு மயக்குக்களையறுப்பதற்காக வேயாகையாலும், இதுதான் ரஹஸ்யார்த்தமாகையாலும் ரஹஸ்ய க்ரந்தங்களிலே சேர்த்துப் பரிகணித்தது ஏற்கும்.

81. **மாத:**—இங்கு முதற்பாட்டின் முடிவில் *என் கண்ணினுள்ளன வொக்கின்றதே* என்றவிடத்து முநிவாஹனபோகம்—"இத்திருவடிகளின் போக்யதாதிசயத்தை ஒரு உத்ப்ரேக்ஷையாலே அருளிச்செய்கிறார்" என்று அவதாரிகாரூபமாகவுள்ளது. மூலத்தில் (ஒக்கின்றதே) என்றதைக் கண்டு உத்ப்ரேக்ஷையென்னலாமோ? வஸ்தூத்ப்ரேக்ஷை, ஹேதூத்ப்ரேக்ஷை, பலோத்ப்ரேக்ஷை என்பவற்றில் இந்த உத்ப்ரேக்ஷை எதிற்சேர்ந்ததென்று வினவினால்......இந்த விசாரம் நமக்கு வேண்டா. 'வந்தாய்போலும், உண்டாய்போலும்' என்னுமிடங்களிலும் உதப்ரேக்ஷையென்னலாம்.

82. **கேச:**—'இந்த விசாரம் நமக்கு வேண்டா' என்று சொல்லிவிட்டு மேலும் ப்ரஸங்கிப்பது நன்றாயில்லையே. அஞ்ஜலிசெய்து விட்டுவிடு. *மந்யே சங்கே த்ருவம் ப்ராயோ நூநமித்யேவமாதிபி:, உத்ப்ரேக்ஷா வ்யஜ்யதே சப்தை;* என்றவுடனே *இவசப்தோபி தாத்ருச:* என்று தண்டி சொல்லியிருக்கையால் இங்கு (ஒக்கின்றதே) என்றிருக்கையாலே உத்ப்ரேக்ஷை யென்றார்; *கிமிவ ஹி மதுராணாம்* நின்றார் நின்ற ஊர்போலும்* தன்னொப்பான் தானாயுளன் காண்* தன்னொப்பாரில்லப்பன்* என்பது முதலான விடங்களிலும் உத்ப்ரேக்ஷையென்றால் தடுப்பாரார்? இதைவிட்டு வேறு விஷயம் ப்ரஸ்தாவிப்பது நலம்.

83. **மாதவன்:**—காரணத்வம்போலே மோக்ஷ ப்ரதத்வமும் எம்பெருமானுக்கு அஸாதாரண லக்ஷணம் என்று இங்கே ஸாதித்தவர் இந்தக் கொள்கையைச் சில விடங்களில் சிதிலமாக்கிக்கொண்டு பூர்வாசார்ய ஸத்கார விசேஷ ஸூக்திகள் ஸாதிக்கிறாரே, அதைப்பற்றின மருமம் உனக்கு ஏதாவது தெரியுமோ?

84. **கேசவன்:**—பூர்வாசார்ய ஸத்காரமென்ன வேண்டா; ஸ்வஸ்யாபி ஸத்காரந் தான். இதைப்பற்றி நானென்ன சொல்லுவது? ஐம்பது வருடங்களுக்கு முன்பு துராக்ரஹ

நிராக்ருதி யென்றொரு நூல் அவதரித்தது. அதில் ஸ்வாமி ஸூக்திகளில் இருபத்தெட்டு பரஸ்பர விரோதங்கள் காட்டியிருந்தது. அப்போது வேதாந்த தீபிகையென்னும் அஹோபிலமடத்துப் பத்திரிகைக்கு ஆசிரியராயிருந்த திவான்பஹதூர். (தட்டை) T. T. ரங்காசாரியார் அப்பத்ரிகையில் பதில் வெளியிட்டிருந்தார். (என்னவென்றால்) "தேசிகனைப்போலே விஸ்தாரமாக க்ரந்தங்களெழுதினவர் உலகில் யாருமேயில்லை; விஸ்தாரமாக எழுதும்போது ஜநிதர்மாக்களுக்கு அநிவார்யமான ஞாபகப்பிசகினால் முன்னுக்குப்பின் முரண்படுவது ஸஹஜமே" என்றெழுதினர். இது என்போல்வார்க்கே அஸஹ்யமாயிருக்க, பெரியோர்கள் இதைக் கண்டு அவரைக் கண்டியாமல் வாளாவிருந்தது ஆச்சரியமே. "ஸர்வஸ் ஸகந்தேஷு விச்வஸிதி."

85. மாதவன்:—நம் தர்சனத்தில் ச்ருத ப்ரகாசிகையைவிட விஸ்தாரமான க்ரந்தமொன்றுளதோ? அதில்கூட பரஸ்பர விருத்தமான விஷயங்கள் இருக்கும் போலும். நீ சொன்ன பிறகு எனக்கும் இது நினைவுக்கு வருகிறது. அந்த ரங்காசாரியர் சொன்னாராம்—யௌவனபருவத்தில் எழுதினால் ஞாபகப்பிசகு நேராதென்றும், ச்ருத ப்ரகாசிகை யௌவனத்தில் எழுதினதாகையாலே அதில் முரண்பாடு நேரவில்லையென்றும், ஸ்வாமி பெரும்பாலும் வ்ருத்தாப்யத்திலே ஸாதித்ததாகையாலே அது நேர்ந்ததென்றும், "ப்ரபுல்லபலிதம் சிர:" என்று ஸ்வாமி தாமே நரை திரை மூப்பு வந்தெய்தினதைச் சொல்லியிருக்கிறாரென்றும் கூறினாராம்.

86. கேச:—மஹர்ஷி வாஸுதேவாசார்ய ஸ்வாமி இந்த வழியிற்செல்லாமல் விருத்தாம்சங்கள் ப்ரக்ஷிப்தங்களென்று பரிஷ்காரமாகப் பகர்வர். இதாநீந்தந வித்வான்கள் அதை யெழுதுகிறேன் இதை யெழுதுகிறேனென்று ஏதேதோ எக்கச்சக்கமாக வெழுதி வெள்ளைக் காகிதங்களைக் கறுப்பாக்கிவைக்கிறார்களேயொழிய "பரஸ்பர விரோத பரிஹாரங்கள்" என மகுடமிட்டு ஒரு விஷயத்திற்குக்கூட விடையிறுக்க முன்வர மாட்டேனென்கிறார்களே. சரக்கிருந்தால் சும்மா இருக்கவொட்டுமா? வித்வான்களென்று பேர் பெற்றிருப்பவர்களுங்கூட பாதரக்ஷா தோரண கதையையும், காலைவாரியிழுத்துத் தெருவிலே தள்ளியுதைத்த கதையையும், நிமந்த்ரணக்காரர் வஞ்சித்த கதையையும் பாம்பாட்டியோடு சண்டையிட்ட கதையையும் இதே வகுப்பிலுள்ள மற்றும் பல கதைகளையும் திருப்பித்திருப்பி யெழுதியச்சிட்டு வருகிறார்களேயொழிய 'வித்வான்களான நாம் செய்யவேண்டிய காரியம் என்ன?' என்பதை ஒரு வித்வான்கூட விவேகிப்பதில்லையே.

87. மாத:—இதைப்பற்றி நானும் அடிக்கடி ஆலோசிப்பதுண்டு. இவர்கள், தேசிகன் தேசிகன் தேசிகன் தேசிகன் என்று உருப்போடுகிறவர்களேயொழிய தேசிக திவ்யஸூக்திகளில் அநுபவரஸிகர்களாகவோ அவகாஹித்தவர்களாகவோ அடியோடு தெரியவில்லையே. 'தேசிகனைப்பற்றி ஒரு கட்டுரை எழுதிக்கொடும்' என்று யாராவது விரும்பினால் "ஸ்ரீரங்கவாஸிகளெல்லாரும் தேசிகனிடத்தில் பொறாமை கொண்டு திருமாளிகை வாசலில் பாதரக்ஷைகளைத் தோரணமாகக் கட்டிவைத்தும்......" என்று இதைத்தான் பிள்ளையார் சுழியாக இடுகிறார்கள். இதில் தங்களுக்கு ஈஷத்தும் அருவருப்பு தோன்றவில்லையென்றால் இவர்களை என்னவென்று நினைப்பது? வைதிகப்பிச்சிகளின் போக்குதான் இப்படியென்று பார்த்தால் லௌகிகத் தலைவர்களின் போக்கு இதற்குமேல்

தலையேறி வருகிறது. வெட்கக்கேடான இக்கதைகளை அநுவதிக்கவும் நமக்கு வெட்கமாயிருக்கிறது. தேசிக பக்தர்களென்று சொல்லிக்கொள்ளுமிவர்கள் வராஹந் யாயேந இதையே பரம போக்யமாகக்கொள்ளுகிறார்கள்.

88. **கேச:**—மாதவா! தொலைந்து போனது போகட்டும். இனிமேல் இந்த அச்லீலக் கதைகள் அவ்வளவாகத் தலைகாட்டாதென்று நினைக்கிறேன். **ஆசார்ய சம்பூ** என்கிற க்ரந்தமொன்று தான் பிராமாணிகம், அந்த நூலொன்றில் எழுதப்பட்டுள்ள சரித்திரந்தான் யதார்த்தமானது'' என்று சொன்னால் இதை ஸஹிக்கமாட்டேனென்கிறார்களே.

89. **மாத:**—இதில் ஒரு வேடிக்கையான விஷயம் நீ கேட்டிருக்கமாட்டாய்; சொல்லுகிறேன் கேள். டில்லியில் ஒரு லௌகிகப் பெரியவர் இந்த ஆசார்ய சம்புவை தேவநாகரியில் அச்சிட விரும்பி ஒரு மடாதிபதியிடம் சென்று இதற்குப் பொருளுதவி புரியவேணுமென்று கேட்டார். ஆயிரம் ரூபா தருவதாக இசைந்து முதலில் இருநூறு ரூபா கொடுத்தாராம். பணம் பெற்றவர் அச்சிட ஆரம்பித்துவிட்டார். மறுபடியும் தொகை பெறுவதற்காக அந்த மடாதிபதியிடம் சென்று வார்த்தையாடிக்கொண்டிருக்கையில் லோகாபிராம வார்த்தைகளில் ''இந்த சம்பூ க்ரந்தத்தை P. B. A. ஸ்வாமி மிகமிகக் கொண்டாடுகிறார், இதை வெகு ப்ராமாணிகமான க்ரந்தமென்கிறார்'' என்றாராம். இது காதில் விழுந்தவுடனே 'அப்படியானால் இதற்கு நான் ஒரு பைஸாகூட கொடுக்க மாட்டேன், போம்' என்றாராம் மடாதிபதி. P.B.A. கொண்டாடும்படியிருந்தால் இதில் நமக்கு விரோதமான விஷயங்களிருக்கும்போலும்; இதை வெளியிடவே வேண்டாம். நிறுத்திவிடும்—என்றாராம்.

90. **கேச:**—உண்மைதானிது; இக்காலத்தவர்கள் கற்பனை செய்த கதைகள் அந்த சம்புவில் இடம் பெறாமையாலே அதில் இவர்களுக்கு மிகுந்த வெறுப்புதானுள்ளது, ''ஹந்த ஹந்த! ராமக்ருஷ்ண தூஷணுபிதாயிநாம் கிம் நு சித்ரமத்ர சைத்ய ராவணாநுஸாரிணாம்'' என்றிப்படிப்பட்ட நிந்தைக் கந்தைகளைத் தலைமேல் வைத்துக்கொண்டு கண்ணீர் பெருகவிட இவர்களுக்குக் குதூஹலமேயொழிய ப்ராமாணிக க்ரந்தங்களைப் போற்றுவதில் ருசிலேசமுமில்லை. இது எப்படியாவது தொலையட்டும். தேசிக ஸூக்திகளிலுள்ள பரஸ்பரவிரோதத்தைக் கண்ணாடிபோல் எடுத்துக் காட்டினால், வித்வான்களாயிருந்தால் அதற்கு விடையிறுக்காமல் கண்ணுறங்க மனங்கொள்ளுவார்களோ? ''தேள் கொட்டின திருடன்'' என்பார்களே, அந்த ரீதியாகவன்றோ ஒவ்வொரு வித்வானும் இருந்து வருகிறார். சில பண்டிதர்களை நோக்கி நான் நேரிலும் கேட்டிருக்கிறேன். அவர் எழுதிக்கொண்டிருக்கிறார், இவர் எழுதிக்கொண்டிருக்கிறார், அச்சுக்கூடம் தேடிக்கொண்டிருக்கிறார்கள், பணம் வசூலாகிக் கொண்டிருக்கிறது என்று ஸ்ரீமத் கப்பீரமாக விடை கூறுகிறார்கள். எத்தனை நாளாக? வருஷக் கணக்காக.

91. **மாத:**—தேசிக ஸூக்திகளில் பரஸ்பரவிரோதம் இருக்கிறதென்பதை ஒப்புக்கொள்ளுகிறார்களா? விரோதமே கிடையாது என்று உடாய்த்து விடுகிறார்களா? ஆனால் அப்படி உடாய்க்க முடியாமலிருப்பதால் எதையாவது சொல்லியோ எழுதியோ தீரவேண்டியதாகிறது. ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்திற்கு வியாக்யானமெழுதினவர்களில் ஸ்ரீமத் இஞ்சிமேட்டழகியசிங்கர் ப்ராஜ்ஞபுங்கவரும் ப்ராமாணிகருமாவர்; இந்த பரஸ்பர

விரோதங்கள் அவர் திருவுள்ளத்தில் படாமலில்லை; நன்றாகப் பட்டிருந்தும் அவற்றை யெடுத்துக் கழிப்பதில் கண் செலுத்தாதே "கூறுவர் என்பதற்கு சொல்லுவர் என்று அர்த்தம்; போவர் என்பதற்கு கமனம் செய்வர்களென்று அர்த்தம்; உண்பர்—புஜிப்பர் என்றபடி" என்றிப்படியே வியாக்கியானத்தைத் தலைக்கட்டினர். இதை விட்டுவிடுவோம்.

92. **கேச:**—ஆசார்யசம்புவை தேசிக சரித்ர விஷயத்தில் ப்ராமாணிகமென்று கொள்வது ஸரி. ஆனால் அதை ஸர்வாத்மநா ப்ராமாணிகமென்று கொள்ளமுடியுமா? ப்ரபோத சந்த்ரோதய கர்த்தாவான க்ருஷ்ணமிச்ரன் தேசிகனுக்கு மிகவும் புராதனன் என்பது அசைக்கமுடியாத ப்ரமாணங்களினால் தேறியிருக்க, அந்த க்ருஷ்ணமிச்ரனுக்கும் தேசிகனுக்கும் நேரில் வாதயுத்தம் நடந்ததாக ஆசார்ய சம்பூகாரர் எழுதியிருப்பது அப்ராமாணிகந்தானே.

93. மாத:—இதைப்பற்றி நான் நன்கு அறிவேன். சொல்லுகிறேன் கேள். P. B. A. பலபல விஷயங்களையும் ஆராய்ச்சி செய்கிற முறையில் இவ்விஷயத்தையும் பலவாண்டுகட்குமுன்னமே ஆராய்ச்சி செய்து க்ருஷ்ணமிச்ர தேசிகஸமாகமம் அஸம்பாவிதம் என்று பேர்க்கவும் பேராதபடி விளக்கியிருந்தார். சேட்லூர் நரஸிம்ஹாசாரிய ரென்பவர் இதைப் பாராமலே தானெழுதிய தேசிக சரித்திரத்தில் ஸங்கல்பஸூர்யோதயத் தைப்பற்றி யெழுதுகையில் அந்தபரம்பரையாக வந்த ஐதிஹ்யத்தை யெழுதிவிட்டார். பிறகு சில பெரியார்கள் P. B. A. விரிவாக எழுதியிருந்த விளக்கங்களை அவர்க்குக் காட்டினார்கள். அதன்மேல் வாயைக்கையைத் திறக்கமுடியாதபடி திக்குமுக்கலாடின அவர் அந்த புத்தகத்திலேயே **"சரித்ர விமர்சம்"** என்றொரு பகுதியிட்டு அதில் (பக்கம் 137ல்) க்ருஷ்ணமிச்ர **நிரஸனம்** என்ற மகுடத்தின்கீழ் (ஏதோவொரு வைபவ ப்ரகாசிகையை நம்பித் தாம் அப்படி யெழுதிவிட்டதாகக் காட்டிவிட்டு "ப்ரபோத சந்த்ரோதய நாடகத்தை யெழுதிய க்ருஷ்ணமிச்ரன் பன்னிரண்டாம் நூற்றாண்டின் இறுதியிலும் பதின்மூன்றாம் நூற்றாண்டின் ஆரம்பத்திலும் இருந்தவனென்றும், அந்த நாடகம் கி. பி. 1200ஆண்டில் எழுதப்பட்டதென்றும் விமர்சகர்களினாலே நிஷ்கர்ஷிக்கப் பட்டிருப்பதினால் அந்தக் கவி தேசிகனோடே நேரில் வாதம் செய்திருக்கமுடியாது" என்றெழுதிப் பிரசுரம் செய்துவிட்டார். அதைக் கண்ட P. B. A. அவரை லேசில் விடவில்லை; "இந்த வொருவிஷயத்தில் மட்டும் நீர் தெளிந்தமை காட்டினால் போதாது; நானெழுதிய ஒவ்வொரு விஷயமும் உமக்குப் பேர்க்கவும் பேராததாகையால் நான் மறுத்த ஒவ்வொரு விஷயத்தையுமெடுத்து 'இதிலும் தெளிவு பெற்றேன், இதிலும் தெளிவு பெற்றேன்' என்றெழுதி வெளியிட்டாலொழிய உம்மை விடுவதில்லை" என்றெழுதினார்; அதன்பிறகு தெய்வமேயென்று க்ஷாமணபத்ரிகை (மன்னிப்புக் கடிதம்) எழுதியனுப்பி க்ருதக்ருத்யரானார். அது மறுநாளே அச்சாகி P. B. A. பத்ரிகையில் வெளிவந்துவிட்டது. அதன்பிறகு ஒன்பது வருஷம் வாயைக்கையைத் திறவாமல் ஜீவித்திருந்தார் அந்த சேட்லூரையங்கார்.

94. **கேச:**—இதெல்லாம் உலகமறிந்ததேயொழிய ஏகாந்தமன்று: இந்த சேட்லூரையங்கார் "க்ருஷ்ணமிச்ரனுக்கும் தேசிகனுக்கும் காலவிப்ரகர்ஷமிருப்பதாகத் தெரியவருவதனால்" என்றெழுதியிருக்கலாம். "விமர்சகர்களினாலே நிஷ்கர்ஷிக்கப்

பட்டிருப்பதினாலே" என்றெழுதியது தலைவிதியேயொழிய வேறில்லை. அதவா, இந்த விஷயத்தைத் தொடாமலே (அதாவது) திருத்தம் காட்டாமலே அவர் போயிருக்கலாம்; அக்காலத்தில் தெய்வக்கூத்தன்றோ பிரபலமாக நடந்திருக்கிறது. இங்கு இப்போது இந்த ப்ரஸங்கம் ஆசார்ய சம்புவைத் தொட்டல்லவா வந்தது. ப்ராமாணிகரான அந்த சம்பூகாரர் இக்கதையை எப்படி எழுதிவைத்தார்? சொல்லு பார்ப்போம்.

95. மாத:—இதை ஸாவதானமாகக் கேள். நம்மைப்போன்ற மனிதர்கள் எழுதும் நூல்களுக்கு ப்ரமம் ப்ரமாதம் விப்ரலிப்ஸை என்று சில தோஷங்கள் ஸம்பாவிதங்கள். வேணுமென்றே மனஸ்கரித்துத் தவறாக எழுதிவைப்பது விப்ரலிப்ஸா மூலகம். அது துராக்ரஹக்ருத்யமாகையாலே அது கண்டிக்கப்பட வேண்டியது அவசியமாகிறது. இந்த நவீனர்கள் எழுதும் சரித்திரங்கள் ப்ரமப்ரமாதமடியாகவல்லாமல் வேணுமென்றே துராக்ரஹத்தினால் எழுதப்படுமவையாதலால் க்ஷேபிக்கத்தக்கவையாகின்றன. அந்த சம்பூகாரர் பரமஸாத்விகர்; வைஷம்யமோ மாத்சர்யமோ லவலேசமுமில்லாதவர். ஆசார்ய தூஷணமென்பதை அணுவளவும் நெஞ்சாலும் நினையாதவர். அப்படிப்பட்ட அவர் ஏதோ காதில் விழுந்த கதையை யெழுதிவைத்தாரத்தனை. அதனால் அவர்க்கு அப்ராமாணிகத்வம் சொல்ல முடியாது. இதை விட்டுவிடுவோம். தேசிக திவ்ய ஸூக்திகளில் சர்ச்சைகள் செய்ய வேணுமென்று எனக்கு மிகவும் குதூஹலமுள்ளது. அப்ராமாணிக வழியிலே அல்பமும் செல்லாமல் ஆர்ஜவத்தோடு நாம் சர்ச்சிக்கவேணும். அத்நுஷ்டாத்தமொன்றம் ப்ரந்யாஸமொன்றும் ஏதோ சொல்லி வருகிறார்களே இதற்கு தேசிக ஸூக்தி யாதாரமுண்டா? கேட்க விரும்புகிறேன்.

96 கேச:—மாதவா! இது மிகவும் வீணான விசாரம். ரஹஸ்யத்ரய ஸாரத்தில் க்ருதக்ருத்யாதி காரத்தில்—"அவஸர ப்ரதீக்ஷையான பகவத் க்ருபையடியாகவுண்டான ஸதாசார்ய கடாக்ஷ விஷயீகாரத்தாலே வந்த த்வயோச்சாரணா நூச்சாரணத்தாலே ப்ரபத்த்யநுஷ்டானம் பிறந்த பின்பு சரண்ய ப்ரஸாதனங்களில் இதுக்குமேல் ஒன்றில்லாமையாலே" என்றெழுதியும், தமிழில் எழுதியது போதாமல் ஸம்ஸ்க்ருதத்திலும் இதையே மொழி பெயர்த்தெழுதவேண்டி சரணாகதி கத்ய பாஷ்யத்தில் முடிவில்—"பகவத் க்ருபாமூல ஸதாசார்யாங்கீகாரேண த்வயோச்சாரணா நூச்சாரண பூர்வக ஸ்வரக்ஷாபரந்யாஸே ஸித்தே ப்ரஸாதநேஷு அஸ்மாதப்யதிகஸ்ய அபாவாத் ஸ்வீக்ருதபர: ச்ரிய: பதிர் நாராயண:......" என்றெழுதியும் வைத்திருக்கிறார் தேசிகன். தமிழ் வாக்கியங்களை முன்னேயெழுதி அதை ஸம்ஸ்க்ருதத்தில் மொழி பெயர்த்தாரா? ஸம்ஸ்க்ருத வாக்யத்தை முன்னேயெழுதி அதைத் தமிழில் மொழி பெயர்த்தாரா? என்றால் தேவோ ஜாநாதி. அந்யூந அநதிரிக்தமாக அமைந்த வாக்யங்களிவை. இவற்றுக்குத் திலகமாக ந்யாஸ திலகத்தில் "ச்ருத்வா வரம் ததநுபந்த மதாவ லிப்தே" என்றுள்ளது. ஆசார்யகம் பண்ணுகிற ஆதுனிகர்கள் இவற்றையெல்லாம் காணாதவர்களா? ப்ரவசனம் செய்கிற காலத்திலே இருமல் தும்மல்களை வரவழைத்துக்கொண்டு கனைப்பதும், அஸ்தானே குசலப்ரச்னாதிகளால் காடு பாய்வதுமாயிருந்து வருகிறார்கள். இதில் நாம் சர்ச்சித்து லாபமென்ன? எதையும் யாரும் விடப்போகிறதில்லையன்றோ?

97. **மாத:**—ஸ்ரீமத் இஞ்சிமேட்டழகியசிங்கர் ரஹஸ்யத்ரயஸார வியாக்கியானம் ஸாதித்திருக்கிருரே, அதில் ஒன்றும் விவரணம் பண்ணவில்லையோ?

98. **கேச:**—எடுத்துப் பார்க்கலாமே. "**வந்த**—ப்ராப்தமான. **த்வயோச்சாரணு நூச்சாரணத்தாலே**—ஆசார்யோபதிஷ்ட கரண மந்த்ரோச்சாரணத்தாலே. **பிறந்தபுன்பு**—உண்டான பிறகு." இதுதான் வியாக்கியானம். 'உண்டான பிறகு' என்று மூலமிருந்தால் 'பிறந்த பின்பு' என்று அர்த்தமருளிச்செய்தாகும். பரிஹாரமில்லாத வியாதிக்கு அமெரிகாவிலிருந்தும் ஜர்மனியிலிருந்தும் பிரபல வைத்தியர்தான் வந்து என்ன பண்ண முடியும்? ப்ராமாணிகர், பண்டிதர் என்று கைகூப்பி விடவேணும். சரணுகதியில் முநித்ரயக்சக்ஷி மடக்கக்ஷியுண்டே, அதைப் புகுரவிட்டிருக்கிரூர். மேலே காட்டின இவருடைய வியாக்கியான வாக்கியத்தில் கரணமந்த்ரம் என்பதைக் கர்ணமந்த்ரம் என்று சிலர் வாசித்துவிட்டு, கர்ணமந்த்ரத்தைப் புரோஹிதர் ஜபிப்பதுண்டேயொழிய அதற்கு அநூச்சாரணமுண்டோ? என்று விசாரம் செய்பவர்களுமுள்ளார்கள்.

99. **மாத:**—ஸ்ரீபாஷ்யமங்கள ச்லோகத்தில் **விநதவிவிதபூதவ்ராதரக்ஷைகதீக்ஷே** என்றவிடத்தில் வ்ராதசப்தவையர்த்த்யத்தை சங்கித்து ச்ருதப்ரகாசிகையில் அருளிய அற்புதமான அர்த்தமும், அதை தேசிகன் தத்வடீகையில் போஷித்து அருளியதும் அரர்க்கமான விஷயங்கள். இதைப்பற்றி அடுத்த நாளில் சர்ச்சிப்போம். இப்போது திருப்பாணுழ்வார் சாத்துமுறை கோஷ்டிக்குச் சென்று அநுபவிப்போம்.

100. இது பத்ராதிபரான P. B. A. அடியேனுடைய **விண்ணப்பம்.** இந்த ஸம்வாதம் ஸ்ரீ வைஷ்ணவவுலகுக்குப் பரமோபகாரகம். இது தொடர்ந்து வெளிவரும். தேசிகனுடைய எழுநூருண்டு விழாவுக்கு நினைவு மலராக நாமெழுதி வெளியிட்டுவரும் நற்பொருளெழுநூறில் இது ஐந்தாவது நூறு. ஆருவது நூறு முன்னமே வெளிவந்து விட்டது. ஏழாவது நூறில் இந்த ஸம்வாதம் முடிவுபெறும். இந்த ஸம்வாத வியாஸத்தின் தலைமேல் சீரிய சிங்காசனத்து வீற்றிருக்கும் ஆசார்யஸார்வபௌமர்கள் இனிமேல் வெளியிட்டருளும் மஹார்த்தங்கள் உலகத்தைத் தெளிவிக்கும். அதை ஆவலுடன் எதிர்பார்த்திருக்க. ... ... ... ... ❋

(வெண்பா.) **ஏழ்பாரு முய்யவரு வேதாந்த வாரியர்தம்**
**தாழ்வாது மில்லாத் தனிச்சிறப்பைப்—பாழாக்கும்**
**பத்தியிலாப் பாமரர்கள் பாடும் பழிச்சுமைகள்**
**அத்தனையும் நீரு மழிந்து.**

**ஸ்ரீ காஞ்சீ. அண்ணங்கராசாரியர் இயற்றிய நற்பொருளெழுநூறில்**
**ஐந்தாவது நூறு முற்றிற்று.**

ஸ்ரீ:

# நம் ஸ்ரீராமாநுஜன் இருபத்தோராவது பிராயத்தில் புகும் இந்த நன்னாளில் ஸ்ரீ ராமாநுஜரைப்பற்றி இருபத்தொரு விசேஷங்கள்

## மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தியைக்கொண்டு விஜ்ஞாபிக்கப்படுகின்றன

மணவாள மாமுனிகள் யதிராஜ விம்சதியில் இரண்டாவது சுலோகத்தில் ஸ்ரீரங்கராஜ சரணாம்புஜ ராஜஹம்ஸ மென்றும், ஸ்ரீமத் பராங்குச பதாம்புஜ ப்ருங்கராஜ



மென்றும் எம்பெருமானார்க்கு இரண்டு விசேஷணங்களிட்டு அவரை ஹம்ஸமாகவும் வண்டாகவும் அருளிச்செய்திருப்பது ப்ரஸித்தம். ஹம்ஸத்தோடும் வண்டோடும் ஸ்வாமிக்குள்ள ஸாம்யம் இருபத்தொருபடிகளாலே ஈண்டு விவரிக்கப்படுகிறது.

## —முந்துற முன்னம் ஹம்ஸஸாம்ய விவரணம்—

1. *யத் ஸாரபூதம் தத் உபாததீத ஹம்ஸோ யதா க்ஷீரமிவ அம்புமிச்ரம்* என்பது ப்ரஸித்தமான சுலோகம். அஸாரங்களும் அல்பஸாரங்களும் ஸாரங்களும் கலசியிருக்கிற சாஸ்த்ரங்களில் அஸார அல்பஸாரங்களைத் தள்ளி ஸாரமானதைக் கைக்கொள்ளவேணும்; எதுபோலவென்றால், ஹம்ஸபக்ஷி நீரோடு கலந்த பாலை

மூக்காலே கொந்தி நீரைத் தள்ளிப் பாலைக் கொள்வதுபோல—என்பது இதன் கருத்து. ஸ்வாமியும் ஸாராஸார விவேக குசலமான ஹம்ஸம்போன்று அஸாரமான மதங்களைத் தள்ளி ஸாரமான விசிஷ்டாத்வைத மதத்தைக் கைக்கொண்டவர்.

2. எம்பெருமான் சாஸ்த்ரப்ரதானம் பண்ணுவதற்காகக் கொண்ட அவதாரம் ஹம்ஸாவதாரம். இதனை ஆழ்வார்கள் *அன்னமதாயிருந்து அங்கு அறநூலுரைத்த* என்றும் *அன்னமாய் நூல் பயந்தான்* என்றும், *பின்னிவ்வுலகினில் பேரிருள் நீங்க, அன்னமதானுன்* என்றும் பலவிடங்களில் அருளிச்செய்தார்கள். இவ்வண்ணமாக ஸ்வாமி யெம்பெருமானுர் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யராயிருந்து உலகம் போற்றும் ஸ்ரீபாஷ்ய கீதாபாஷ்யாதிகளான நூல்களையருளிச் செய்தார்.

3. ஹம்ஸமானது சேற்றுநிலத்தைக் கண்டால் வெருவியோடும்; அதில் காலை வைக்கமாட்டாது என்பதை *ந பத்நாதி ரதிம் ஹம்ஸ: கதாசித் கர்தமாம்பஸி* என்னும் ப்ரமாண வசனத்தினுல் அறிகிறேம். ஸ்வாமியும் *மாறன் விண்ணப்பஞ் செய்த சொல்லார் தொடையலிந்நூறும் வல்லார்—பிறப்பாம் பொல்லாவருவினை மாய வன் சேற்றள்ளல் பொய்ந்நிலத்தே அழுந்தார்* (திருவிருத்தம்—100) என்கிறபடியே ஸம்ஸாரமாகிற சேற்று நிலத்திலே பொருந்தாத பரமவிரக்தாக்ரேஸரராய் விளங்கினுர்.

4. திருமங்கையாழ்வார் திருநறையூர்ப் பாசுரத்தில் *பெடையோடன்னம் பெய்வளையார்தம் பின்சென்று நடையோடியலி நாணியொளிக்கும்* என்றுர். அதாவது, ஹம்ஸமானது ஸ்த்ரீகளின் நடையழகைக் கண்டு தானும் அப்படி நடக்க ஆசைப் படுமென்று தெரிவித்தபடி. அதுபோல ஸ்வாமியும் *அன்ன நடையவணங்கான பிராட்டியின் நடையைப் பின்பற்றியிருப்பர்—பிராட்டியின் நடையாவது நடத்தை, புருஷகாரக்ருத்யம். *தத்தே ரங்கீ நிஜமபி பதம் தேசிகாதேச காங்க்ஷீ* என்ற ந்யாஸதிலக ஸூக்திப்படியே எம்பெருமானுர் நியமனமில்லாதார்க்குப் பேறு அரிதன்றே.

5. திருக்கண்ணங்குடிப் பதிகத்தில் *அன்னம் மென்கமலத்தணி மலர்ப் பீடத்து அலைபுனலிலைக் குடை நீழல்—வீற்றிருக்கும்* என்று, ஹம்ஸமானது மேலேயெழுந்த தாமரையிலையைக் குடையாகக்கொண்டு மலரில் வீற்றிருக்குமென்றது. இவ்வண்ணமாக, *அக்கமலத்திலைபோலுந் திருமேனியடிகள்* என்ற திருவாய்மொழிப் பாசுரத்தினுல் எம்பெருமானுடைய திருமேனி தாமரையிலையாகச் சொல்லப்படுவதால் பத்மபத்ர நிபச்யாமமான அந்தத் திருமேனியை ஸ்வாமி ஸம்ஸாரதாபம் தட்டாதபடி ஒதுங்க நிழலாகக்கொண்டிருந்தபடி சொன்னவாறு. *வாஸுதேவ தருச்சாயா* என்றதையும் இங்கே நினைப்பது.

6. மேலே காட்டின திருக்கண்ணங்குடிப் பாசுரத்திலேயே "அன்னம்—செந்நெலொண்கவரியசைய வீற்றிருக்கும்" என்று, ஹம்ஸமானது பக்வபலமான செந்நெற் பயிரின் அசைவை சாமரம் வீசுதலாகக்கொண்டு வீற்றிருக்குமென்றது; அவ்வண்ணமாக *அஹமந்நம் அஹமந்நம் அஹமந்நம்* என்னும்படி பரிபக்குவமான ஞானத்தையுடைய சிஷ்யர்களைச் செந்நெற் கதிர்களாகக் கொள்ளக்கடவது; அவர்கள் சாமரை வீசுதல் முதலிய கைங்கர்ய வ்ருத்திகளைச் செய்ய ஸ்வாமி ஆசார்ய பீடத்தில் எழுந்தருளியிருக்கும்படி சொன்னவாறு.

7. பெரிய திருமொழியிலேயே தேரழுந்தூர்ப் பதிகத்தில் *சங்கமலவை முரலச் செங்கமல மலரையேறி அன்னம் மலிபெடையோடு மமரும்* என்று, ஹம்ஸமானது சங்குகளின் முழக்கத்தை இனிதாகக் கேட்டுக்கொண்டிருக்குமென்றது; அவ்வண்ணமாகவே, சுத்த ஸ்வபாவர்களாய் அதனாலே சங்குகளென்னலாம்படியுள்ள பரமப்ரேமபாத்ர சிஷ்யர்கள் செய்யும் ஸ்துதி கோஷங்களைக் காதாரக்கேட்டுக்கொண்டு ஸ்வாமி எழுந்தருளியிருந்தபடி சொன்னவாறு.

8. அந்தத் தேரழுந்தூர்ப் பதிகத்திலேயே *மன்னுமுதுநீர் அரவிந்த மலர்மேல் வரிவண்டிசை பாட, அன்னம் பெடையோடுடன் நாடும்* என்று, ஹம்ஸமானது வண்டுகளின் மிடற்றோசையைப் பாட்டாகக் கொண்டிருக்குமென்றது. அதுபோல *போந்த தென்னெஞ் சென்னும் பொன் வண்டு, உனதடிப் போதிலொண் சீராந்தெளி தேனுண்டு அமர்ந்திடவேண்டி* என்ற இராமானுச நூற்றந்தாதிப்படியே அமுதனார் போல்வாரான ஸாரக்ராஹிகளின் துதிமொழிகளைச் செவிமடுத்துக்கொண்டு ஸ்வாமி சிஷ்யவர்க்கங்களோடிருந்தமை சொன்னவாறு.

9. திருவாய்மொழியில் *இடரில் போகம் மூழ்கி இணைந்தாடும் மடவன்னங்காள்* *அந்தரமொன்றுமின்றி அலர்மேலசையு மன்னங்காள்! *மிகவின்பம் படமேவும் மென்னடையவன்னங்காள்!* என்றருளிச்செய்தபடியே பரமஹம்ஸரான நம் ஸ்வாமி விலக்ஷண பகவத் போகத்தில் ஆழ்ந்திருந்தபடி சொல்லுகிறது. அது கத்யத்ரயத்தில் காணத்தக்கது.

10. திருவிருத்தத்தில் அன்னத்தையழைக்குமிடத்து *குடிச்சீர்மையிலன்னங்களே!* என்றாராழ்வார். இதனால் ச்ரேஷ்ட ஜன்மமுடைமை சொல்லிற்று. ஆபஸ்தம்ப ஸூத்ரத்தில் "சரீரமேவ மாதாபிதரௌ ஜநயத:; ஸ ஹி வித்யாதஸ் தம் ஜநயதி தத் ச்ரேஷ்டம் ஜந்ம" என்று சொல்லப்பட்ட ச்ரேஷ்ட ஜன்மமுடையவர் *ஸகல வித்யா வாஹிநீஜன்மசைலரான நம் ஸ்வாமி.

ஆக இவ்வளவும் ஸ்ரீரங்கராஜ சரணாம்புஜ ராஜஹம்ஸ ப்ரபாவம் சொன்னபடி. இனி ஸ்ரீமத் பராங்குச பதாம்புஜ ப்ருங்கராஜப் பெருமை அடுத்த இதழில். ...

## - அன்பர்களுக்கு அறிவிப்பு -

முன்னிதழில் தெரிவித்திருக்கிறபடி 1969-ஆம் வருஷத்திற்குச் சந்தா செலுத்தாதவர்களுக்கு இம்மாதத்துப் பத்ரிகை அனுப்பப்படவில்லை. மாதந்தோறும் இங்கிலீஷ் மாதத்தில் 10 தேதிக்குள் பத்ரிகை வெளிவரும். தவறினால் தமிழ் மாதத்து முதல் வாரத்திற்குள் வெளிவரும்.

—மானேஜர்.

Rgd. No. 2975 ஸ்ரீராமாநுஜன்

## ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபா விளம்பரம்

1966 ஜனவரிமீ புதுப்பிக்கப்பட்ட ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபைக்கு வருடச் சந்தா ரூ. 25—00. செலுத்தி மெம்பர்களாகச் சேரவேண்டியது. அவர்களுக்கு ஸ்ரீராமாநுஜன் பத்ரிகை தனிச் சந்தா இல்லாமல் அனுப்பப்பட்டுவருவதுடன் இருபது ரூபா விலையுள்ள புத்தகங்களும் அளிக்கப்படும். அவர்கள் நம்முடைய புத்தக ஜாபிதாவைத் தருவித்துப் பார்த்து அதில் தங்களுக்கு விருப்பமான (20 ரூ. விலையுள்ள) நூல்களுக்கு ஆர்டர் செய்யலாம்.

இப்படிக்கு,
ஷை ஸபையின் பிரஸிடெண்டு P. B. A.

நமது ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாய நூல்கள் கிடைக்குமிடங்கள்:—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்-3.

(2) V. N. Devanathan,
213. Govindappa Naicken St., G. T. Madras.

(3) M. A. KRISHNAMMAL, Advocate,
20, South Mada Street, Triplicane, Madras-5.

(4) A. RAMANUJACHARI, B. A.,
A 230 E. Type, Pandara Road. New Delhi.-11.

If un-delivered please return to:
**P. B. ANNANGARACHARYA.**
KANCHEEPURAM-3.

5. Shri P.A. Thiruvenkatacharya,
51, Narayana Mudali St,
Madras-1.

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press.
Sannidhi Street, Kanchipuram-3.

# ஸ்ரீ உ. வே. P. B. அண்ணங்கராசாரியார் ஸ்வாமிகளின் நூல்களுக்கு ஜாபிதா.

## வேதாந்தப்பொருள் விளக்க நூல்கள்

| | | |
|---|---|---|
| விசிஷ்டாத்வைத தரிசனம் | 1 | 00 |
| விசிஷ்டாத்வைத ஸர்வஸ்வம் | 1 | 00 |
| பகவத்கீதையறுபத்திரண்டு | 1 | 25 |
| ஸ்ரீ பாஷ்யாதிகரணமெழுபத்தாறு | 1 | 00 |
| எம்பெருமானார் தரிசனம் | 1 | 00 |
| எம்பெருமானாரறுபத்திரண்டு | 1 | 00 |
| த்ரமிடோபநிஷத்ப்ரபாவஸர்வஸ்வம் | 2 | 00 |
| ராமாநுஜ ஜயந்தி மலர் | 1 | 00 |
| ஸித்தாந்த ஸௌபாக்யம் | 1 | 50 |
| சாரீரகமீமாம்ஸையறுபத்திரண்டு | 1 | 00 |

## ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க நூல்கள்

| | | |
|---|---|---|
| ஸத்ஸம்ப்ரதாயார்த்தஸாரநிதி | 3 | 00 |
| ஸத்ஸம்ப்ரதாயார்த்தரக்ஷா | 1 | 00 |
| ஸர்வஜ்ஞஸூக்தி ஸர்வஸ்வம் | 1 | 00 |
| ஸாத்யபக்தி ஸாதநபக்தி சோதனம் | 1 | 00 |
| வைசாகோத்ஸவோபந்யாஸமாலை | 1 | 00 |
| திருவல்லிக்கேணியுபந்யாஸமாலை | 1 | 00 |
| ஜகதப்யுதயைகமூலம் | 1 | 00 |
| சரணாகதிஸாம்ராஜ்யம் | 1 | 00 |
| ராமாநுஜதயாபாத்ர சரித்ரம் | 1 | 00 |
| ஷை ஸம்ஸ்கிருதம், ஆங்கிலம் | 1 | 00 |
| பாத்ரபத்யபரமார்த்தம் | 1 | 00 |
| மணவாளமாமுனிவாத்ஸல்யம் | 1 | 00 |
| ஸ்ரீசைலேச மந்த்ரப்ரபாவம் | 1 | 00 |
| அத்புதோபந்யாஸமாலை | 1 | 00 |
| ஐதிஹ்யநிர்வாஹ ரத்னமாலை | 1 | 00 |
| ஸ்ரீராமாயண ஸௌரபம் | 1 | 00 |
| ஸ்ரீராமாயண கௌஸ்துபம் | 1 | 00 |
| வைதிகமநோஹரா விளக்கம் | 1 | 00 |
| ஸ்ரீராமாநுஜ ஜயந்தி மலர் | 1 | 00 |
| நற்போதுபோக்கு | 1 | 00 |
| ஸ்ரீவைஷ்ணவ மஹாநிதி | 1 | 00 |
| ஸ்ரீராமாநுஜபூஷணம் | 1 | 00 |
| கம்பரின் பக்கவித்திரட்டு | 1 | 00 |
| நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியுரை | 1 | 00 |
| ஆழ்வார்களுகந்தராமன் | 1 | 00 |
| ஆழ்வார்கள் புகழ்ந்த கண்ணன் | 1 | 00 |
| ஸ்ரீரங்கஸ்ரீ:, ஸ்ரீரங்கச் செய்திகள் | 1 | 00 |
| கோதை தமிழ்ச்சுவையமுதம் | 1 | 00 |
| சாடிச்லோக சதகவுரை | 1 | 00 |
| தானேயெழுதியதன்சரிதை (ஆங்கிலம்) | 1 | 00 |

| | | |
|---|---|---|
| கம்பர்கண்ட கண்டீரவம் | 1 | 00 |
| சங்கத்தமிழ்மாலை முப்பது | 1 | 00 |
| விலக்ஷணஜந்துபகாரம் | 1 | 00 |
| பண்டிதபோக்யபஞ்சாம்ருதம் | 1 | 00 |
| பரமார்த்தரக்ஷா | 1 | 00 |
| அழுகையும் அழச்செய்கையும் | 1 | 00 |
| தொழுகையும் தொழச்செய்கையும் | 1 | 00 |
| பவித்ரயாத்ரா பரமானந்தம் | 1 | 00 |
| கண்டீரவாவதாரகாரண நிரூபணம் | 1 | 00 |
| விபவாவதார சோகதத்வம் | 1 | 00 |
| வரதன் ஸந்நிதி வரலாறு | 1 | 00 |
| தேவப்பெருமாள் ஸந்நிதி விமர்சம் | 1 | 00 |
| விசேஷார்த்த ரத்னநிதி | 1 | 00 |
| ப்ரபந்தசாரதத்வம் | 1 | 00 |
| ப்ரபந்தசார தத்வப்ரதிஷ்டா | 1 | 00 |
| திவ்யப்ரபந்தக் கண்ணாடி | 1 | 00 |
| வைதிகலௌகிக மஹநீயமண்டலி | 1 | 00 |
| வித்யாபரிச்ரமம் | 1 | 00 |
| ஆசார்யசம்பு அபிநந்தனம் | 1 | 00 |
| திவ்யப்ரபந்தஸாரத் திரட்டு | 1 | 00 |
| நான்கு தூதுகளின் மருமம் | 1 | 00 |
| த்ரௌபதீப்ரபாவ விவரணம் | 1 | 00 |
| விஷ்ணு ஸஹஸ்ரநாமவுரை | 1 | 00 |
| அர்ச்சாவதார வைபவம் | 1 | 00 |
| மாமுனிவன் மேற்கோள் விளக்கு | 1 | 00 |

## பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்

| | | |
|---|---|---|
| அத்புதசக்தி | 1 | 00 |
| சேஷாவதாரச் சிறப்பு | 1 | 00 |
| விதவாவபன விமர்சம் | 1 | 00 |
| ஜகதாசார்யஸூக்தி ஸூதாநிதி | 1 | 00 |
| தத்வஹிதோபதேசம் | 1 | 00 |
| மெய்ஞ்ஞான மேன்மை விளக்கு | 1 | 00 |
| வம்பவிழ்கோதை தத்துவம் | 1 | 00 |
| கோதை போலுமாராய்ச்சி | 1 | 00 |
| சிங்கப்பெருமாள் திருவாக்கு வெற்றி | 1 | 00 |
| ஒருமிதுனமே உத்தேச்யம் | 1 | 00 |
| ஸத்ஸம்ப்ரதாய பாஸ்கரன் | 1 | 00 |
| ரத்நபரீக்ஷா (வடமொழி) | 1 | 00 |
| நிகமபரிமள நித்யகல்யாணம் | 1 | 00 |
| தேசிக ஸஹஸ்ரநாம விமர்சனம் | 1 | 00 |
| தேசிகஸூக்தி பரிமளம் | 1 | 00 |
| ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யம் | 1 | 00 |
| ஆழ்வார்களின் காலநிர்ணயம் | 1 | 00 |

(விரிவான புத்தக ஜாபிதா காண்க.)